உ

சிவமயம்.

ஸ்ரீ-மாதை

# திருவேங்கடசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

## பிரபோதசந்திரோதயம்

என்னும்

# மெய்ஞ்ஞானவிளக்கம்.

இஃது

தஞ்சாவூர் ஜில்லா நாகபட்டணம் தாலுகா,

நாகூர் வயித்தியநாதய்யர் குமாரர்,

திருச்சிராப்பள்ளி ஜில்லா புதுக்கோட்டை

பிரிட்டிஷ் போஸ்டாபீஸ் ஹெட் ஸிக்னலரவர்கள்

ம-ா-ா-ஸ்ரீ வ. வெங்கடராமய்யரவர்களது

வேண்டுகோளின்படி

சிதம்பரசந்நிதிக்கண்ணே யெழுந்தருளியிராநின்ற

கோயிலூர்

ஸ்ரீலஸ்ரீ. பொன்னம்பலசுவாமிகள்

முன்னிலையில், அவர்கள் மாணுக்கர்கள்

சுப்பராயசுவாமிகள், இராமாநுஜமுதலியார் இவர்களால்

பிழையறப் பரிசோதிக்கப்பட்டு,

ஷை வ. வெங்கடராமய்யரவர்களால்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1898.



விலை ரூபா 1—8—0.

# இப்புத்தகம் விற்கும் இடங்கள்.



சென்னை

மதராசு ரிப்பன் அச்சுக்கூடம்,

93, தம்பு செட்டி வீதி,

முத்தியாலுப்பேட்டை,

சென்னை.

கோ. சித. ம லாலயம்,

சிதம்பரம்.

# முகவுரை.

கடல்புடை சூழ்ந்த இவ்வுலகிலுள்ள மாந்தரனைவருமெளி
தின் மெய்ஞ்ஞான நெறியையுணர்ந்து இகபரசாதன மிரண்டை
யும் பெற்றுய்தற்பொருட்டு, காவிய புராண நடையாய் வகுத்து
ள்ள பிரபோத சந்திரோதயம் என்னு மிந்நூல் யாதுகாரணத்தி
னலோ சுத்தப்பிரதியாய் அச்சியற்றப்பெறாது எண்ணிறந்த அட்
சரவழுக்களோடும் இலக்கண இலக்கியவமைதிகுன்றியும் பொருள்
விளங்கற் கொண்ணாதாயும் தாழ்ந்த காகிதத்தில் செய்யுள் அட்டவ
ணை சருக்கஅட்டவணை, சருக்கத்தொகை, வம்சாவளி, முகவுரை,
நும்பொருளுரை என்னும் இவைகளின்றிப் பதங்களும் செய்
ட்களும ஆங்காங்குப்பிறழ்ந்து தலைமயங்கவும் சிலசெய்யுட்களை
ட்டுவிட்டும் அச்சிடப்பட்டிருந்தமை பற்றி அவைகளைச் சீர்
ருத்திப் பார்க்கவேண்டுமென்கிற எனது நீடிய அவாவினுற் சில
ருணர்ந்த பெரியோர்களைக் கொண்டு அப்பிழைகளைக் களைந்து
ந்தப்பிரதியாக நூதனப் பதிப்பில் இயற்றச் செய்திருக்கின்
னென்று, ஸத்குண சம்பன்னர்களான மஹான்களுடைய
முகத்தில் விஞ்ஞாபனஞ் செய்துகொள்ளுகின்றேன்.

வேதாந்தசாராம்சத்தையும் தத்துவதத்துவத்தினுண்மையை
மளிதிலுணர்ந்தற் காதாரமாயுள்ள இந்த முக்கிய நூலை, மேற்
ரையன்னவருந்திருத்தியருளிச்செய்த மஹான்களாகிய கோ
லூர்-ஸ்ரீ ஸ்ரீ-பொன்னம்பல சுவாமிகளவர்கட்கும், அவர்களின்
நட்பிரசாதம பெற்று எழுந்தருளியிராநின்ற திவ்யமாணுக்கர்
ரான சுப்பராய சுவாமிகள், இராமாநுஜ முதலியார் முதலிய
னோர்கட்கும் இதனடியிற் கையொப்பமிட்டிருக்கு மடி
பன் மிக்க நன்றியறிதலுள்ளவனுகவும் பக்தி விசுவாசமுள்
வனுகவு மிருப்பதுமன்றி அவர்கட்கு ஸர்வ இஷ்டகாமிய சித்
தியையும் அனுக்கிரஹிப்பான் ஸ்ரீ-பாண்டுரங்கனைச் சதா பிரார்த்
திக்கின்றனன். இப்புத்தகத்தில் வருகிற லாபத்தைப் பகீரதி
லாசமென்று ஒன்று ஏற்படுத்தி, காசி கங்கையை வரவழைத்
ப் புண்ணிய காலங்களில் தேவாலயங்களுக்கு உபயோகப்படுத்
படும்.

இங்ஙனம்,

வ. வேங்கட ராமய்யர்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# மெய்ஞ்ஞானவிளக்கச் சருக்க அட்டவணையும், விருத்தத்தொகையும்.



மெய்ஞ்ஞானவிளக்கச் சருக்க அட்டவணையும்,

விருத்தத்தொகையும்

— முற்றிற்று.

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

இதனால் சகல கனவான்களுக்கும், அச்சுக்கூடத்ததிபர்களுக்கும் அறிவிப்பது யாதெனில், இந்தப் பிரபோத சந்திரோதயம் என்னும் சாஸ்திரத்தை அடியில் கையொப்ப மிட்டிருக்கிற என்னால் அச்சிட்டு ரிஜிஸ்தர் செய்திருப்பதால், ஷை புஸ்தகத்தை என்னுடைய அநுமதியன்றி யாராமொருவர் அச்சிடுவரேல் 1867 வரு௸ 25-வது ஆக்ட்டு, 20-வது பிரிவு, 6-வது உட்பிரிவின் விதிப்படி நான் கோரும் நஷ்டத்திற்கும், பினல்கோடுசெக்ஷன் குற்றத்திற்கும் உத்தரவாதிகளாக வேண்டுமென்பதைக் கவனிக்கக் கோருகிறேன்.

இப்புத்தகம் ஸ்ரீலஸ்ரீ சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகளவர்களால் பிழையறப் பரிசோதிக்கப்பட்டுக்காப்பி றயிட் ரிஜிஸ்தர் செய்யப்பட்டிருப்பதோடுங்கூட (கக) பவுன் கல்கத்தா கிலேஸ் காகிதத்தில் பைக்கா டைப்பில் சென்னை ரிப்பன் அச்சியந்திரசாலையில் அச்சுப்பதித்து வ. வெங்கடராமய்ய ரவர்களுடைய இங்கிலீஷ் ரப்பர் ஸ்டாம்பும் ஸ்வய சகிதமான கையெழுத்தும் போட்டுப் புஸ்தக முழுதும உயர்ந்த காலிகோ பயிண்டுசெய்து அதன் முதுகில் தங்கக் கிலிட்டினால் "பிரபோதசந்திரோதயம் விலை ரூபா 1-8-0." என்றும் போடப்பட்டிருக்கிறது. மேற்கண்ட சங்கதிகள் சரியாயிருக்கின்றனவாவென்று பரிசோதித்து விலைக்கு வாங்கவும்.

இப்புத்தகத்தைப்போல யாரேனும் "முன் பிரதிக்கிணங்க" என்றாவது கூலிக்காவது சொந்தத்திலாவது அச்சிட்டாலும அச்சிட்டு வைத்திருந்தாலும் அச்சிட்டுவிற்றாலும அப்படி அச்சிட்டதையாவது அல்லது பிரதேச லோகாக்களிலிருந்து அச்சுப்போட்டுவந்ததையாவது புஸ்தக வியாபாரிகள் குறைந்த அல்லது பான விலைக்காவது கமிஷனுக்காவது வாங்கி விற்றாலும ந மூவாயிரம நஷ்டம் வ. வெஙகடராமய்ய ரவர்களால் கூலிபெ அச்சிட்டவரிடமாவது கூலிகொடுத்து அச்சுப்போட்ட ம னவரிடமிருநதாவது விலைக்கு வாஙகிவிற்கும் புஸ்தக வியாபரிடமிருந்தாவது மேலேசொல்லியவர்களிடமிருநதாவது அ ரால் சொல்லப்பட்ட எவ்வித முகாந்திரங்களையும் ஏற்றுக் ர்ளாமல் வசூல்செய்யவும், மேற்கண்ட ஒவ்வொருவரையும த்திற்கும் உள்ளாக்க முயற்சி செய்யப்படும். புத்தகவியாபா க்காலத்திலேனும் இப்புத்தகத்தை விலைக்கு வாங்கும்பே சீதுபெற்றுக்கொண்டு அதை எக்காலத்திலும் காண்பிக்கவே ம். ரசீது பெற்றுக்கொள்ளாத விஷயத்தில் புத்தகம் யாரிட தேனும் விலைக்காவது கமிஷனுக்காவது வாங்கினார்களோ ரைக் காண்பிக்கவேண்டும்.

வ. வெங்கடராமய்யர்,
ஏட்ஸிக்கிலர், பிரிட்டிஷ் போஸ்டாபீஸ், புதுக்கோட
திருச்சினாப்பள்ளி ஜில்லா.

கணபதி துணை.

# மோகாதியர். விவேகாதியர்

## வம்சபரம்பரை அட்டவணை.

பிரமத்தினோடு மாயை கலந்து
மானதன் பிறந்தனன்.

மானதனுக்குப் பிரவிர்த்தி, நிவிர்த்தியென விரண்டு பெண்சாதிகள்.

அவர்களுள் பிரவிர்த்தியீன்ற மக்கள்.

| ஆண். | பெண். |
|---|---|
| 1 மோகன் | 1 தீவினை |
| 2 அகங்காரன் | 2 கபடி |
| 3 காமன் | 3 அசிரத்தை |
| 4 சேர்பன் | 4 அநீதி |
| 5 மச்சரன் | |
| 6 [illegible] | |
| 7 [illegible]யரன் | |
| 8 [illegible] | |
| [illegible]மதன் | |
| [illegible]கற்பனை | |
| சந்தேகனா | |

நிவிர்த்தியீன்ற மக்கள்.

| ஆண். | பெண். |
|---|---|
| 1 விவேகன் | 1 மயித்திரி |
| 2 நிருபகன் | 2 கருணை |
| 3 பொறை | 3 நீதி |
| 4 சந்தோடன் | 4 முதிதை |
| 5 சம[illegible] | 5 உபேட்சை |
| 6 தமன் | |
| 7 விராகன | |
| 8 சுசீலன் | |
| 9 தவன் | |
| 10 சத்துவன் | |
| 11 இயமன் | |
| 12 நியமன் | |
| 13 ஆசனன் | |
| 14 பிராணயாமன் | |
| 15 பிரத்தியாகாரன் | |
| 16 தாரணன | |
| 17 தியானன் | |
| 18 சமாதி | |

# தனித்தனி ஒவ்வொருவரின் குடும்ப வரலாறு.

| இலக்கம். | மோகஞானியரின் பெயர். | மனைவியர் பெயர். | பிள்ளைகளின் பெயர் | பிள்ளைகளின் மனைவியர் பெயர், பர்த்தா பெயர். | பவுத்ரர்பவுத்ரிகள் பெயர். | பவுத்ரர்மனைவியரும் பவுத்ரிகள்பர்த்தாக்களும். | பிரபௌத்ரர் பிரபௌத்ரிகள் பெயர். |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | மோகன் | துன்மதி | ,, | ,, | ,, | ,, | ,, |
| | | 1 பாவநண்டவிஞ்சை 2 | அஞ்ஞன் | ,, | ,, | ,, | ,, |
| | | | | ,, | ,, | ,, | ,, |
| 2 | அகங்காரன் | அகந்தை | பெண் மமதை ஆண் லோபன் | இச்சை | இடம்பன் | வஞ்சனை | அசத்தியன் |
| 3 | காமன் | இரதி | விடயானந்தன் | ,, | ,, | ,, | ,, |
| 4 | கோபன் | கொலை | கலகன் | ,, | ,, | ,, | ,, |
| 5 | மச்சரன் | அசூயை | வயிரன் | அவமரியாதை | அக்ரமன் | ,, | ,, |
| 6 | மதன் | மறதி | அனர்த்தன் | கெடுதி | நாசன் | ,, | ,, |
| 7 | மானன் | வெகுமதி | உற்சாகன் | ,, | ,, | ,, | |
| 8 | இராசதன் | முயற்சி | பெண் சிரத்தை, ஆண் காரியன் | | | | |
| 9 | தாமதன் | சோம்பல் | பெ-சிரத்தை நித்திரை | | | | |
| 10 | சங்கற்பன் | கற்பனை | விகற்பன் | யோசனை | வெகுமுகன் | ,, | ,, |
| 11 | சந்தேகன் | அசித்தி | கலக்கன் | ,, | ,, | ,, | ,, |
| 12 | பெண்கள் தீவினை | அநாசாரன் | ,, | ,, | ,, | ,, | ,, |
| 13 | அகீர்த்தி | ,, | பெ-மிச்சாதிட்டி ஆ-விடயசங்கன் | ,, | ,, | ,, | ,, |
| 14 | கபடி | கலியன் | சஞ்சலன் | அதோகதி | துக்கன் | ,, | ,, |
| 15 | அநீதி | ,, | அதர்மன் | ,, | ,, | ,, | ,, |

# விவேகனுறவியர்கள்.

| தொகை. | விவேகனுறவியர்கள் பெயர். | மனைவியர்கள், பர்த்தாக்கள் பெயர். | பிள்ளைகளின் பெயர். |
|---|---|---|---|
| 1 | விவேகன் | சுமதி, உபநிடதை | உபநிடதை வயிற்றில் பிரபோதன் |
| 2 | நிருபகன் | யுத்தி | நிச்சயன் |
| 3 | பொறை | உறுதி | அடக்கன் |
| 4 | சந்தோடன் | மகிழ்ச்சி | அற்புதயன் |
| 5 | சமன் | சாந்தி | அகமுகன் |
| 6 | தமன் | தாந்தி | தனிவத்துநோக்குவான் |
| 7 | விராகன் | விரத்தி | சுகன் |
| 8 | சுசீலன் | கீர்த்தி | பிரசித்தி |
| 9 | தவன் | நல்விருத்தி | பரோபகாரன் |
| 10 | சத்துவன் | புனிமைத | தருமன், பெ-சிரத்தை |
| 11 | இயமன் | அயிஞ்சை | இரவாமை |
| 12 | நியமன் | மனநிலை | சத்தியன் |
| 13 | ஆசனன் | திரி | தேயன் |
| 14 | பிராணயாமன் | பூர்த்தி | தீர்க்கவாயு |
| 15 | பிரத்தியாகாரன் | மீட்சி | நிருலேபன் |
| 16 | தியானன் | காட்சி | நிர்ச்சந்தேகன் |
| 17 | தாரணன் | திருத்தி | அப்பிரமன், ஆத்திகன் |
| 18 | சமாதி | தனிநிலை | நிருவிகற்பன், மோனன் |
|  | பெண்கள் | " |  |
| 19 | மயித்திரி | பரமாதானன் | " |
| 20 | கருணை | தருமன் | " |
| 21 | [illegible] | நியாயன் | " |
| 22 | [illegible]தை | அவிரோதன் | " |
| 23 | [illegible]பட்சை | பூரணன் | " |

மோகனுறவியர், விவேகனுறவியர்

வம்சபரம்பரை அட்டவணை

முற்றிற்று.

உ

கடவுள்துணை.

# பிரபோத சந்திரோதயம்

என்று வழங்குகின்ற

# மெய்ஞ்ஞானவிளக்கம்.



## கடவுள் வாழ்த்து.

### பாயிரம்.

திருமடந்தைதன்காதலன்சிவந்ததாண்மலரும்
கருணையந்தடங்கண்களுநாபியங்கமலர்
தொருகுழந்தையுமுடுத்தபொன்னுடையுந்தொடுத்த
மருமலிந்தடைந்துளவுமென்மனத்துள்வாழியவே. (௧)

பொன்னிமாநதிபுடைபரந்தோங்கலிற்புதுப்பூங்
கன்னிவாழையும்பூந்தாழையுங்காய்க்குலைக்கமுகும்
பின்னிநீள்கதிர்ச்செந்நெலுங்கன்னலும்பிறவும்
மன்னிநீடியவளவர்சோணாட்டொருவள்ளல். (௨)

குழைக்குமம்பொனிற்குயிற்றியபன்மணிக்குன்றுந்
தழைக்கும்வெண்ணிலாவரமியத்தலங்களுந்தரளத்
திழைக்குமேழ்நிலைமாடமுங்கூடமுமெங்கும்
மழைக்குலந்தவழ்நெடுமதின்மாதைக்குமன்னன். (௩)

வேறு.

அந்தணர்திலகன்மூதறிஞர்சேகரன்
மந்திரமனைத்துமோர்வடிவமாயினோன்
றந்திரமுதுமறைதவமுரைபவிறை
னிந்திரகற்பகமென்னுஞ்செங்கையான். (௪)

அறம்பொருளின்பம்வீடாயநால்வகைத்
திறந்தெரிந்தநெறிசெலுத்துஞ்செய்கையான்
புறம்பெனவுள்ளமும்புனிதமாயினோன்
மறங்கெடத்தருமநூல்வளர்க்குமவாய்மையான். (ரு)

சத்தியமுதுமறைசாற்றுமாநெறி
யொத்திடுந்திரமுணர்ந்தூழிபேரினு
நித்தனையித்தியநெறிதப்பாவகை
பத்தியிற்புரிந்திடும்பான்மைபூண்டுளான். (சு)

மண்ணிடத்தவரவர்மதியுமற்றவ
ரெண்ணியவெண்ணமுமினியயாவையு
முண்ணிலவுறவகன்றொருங்குகாட்டலாற்
கண்ணடியாமெனக்கருதுஞ்சூட்சியான் (எ)

திணிபுயத்தரசர்தஞ்செம்பொன்மாமுடி
மணிநிரைத்தீபஞ்சூழ்வனசத்தாளினான்
பணிகொளெண்டிசையெனும்பாவைமார்செவிக்
கணிமலர்த்தாரெனலாகுங்கீர்த்தியான். (அ)

மேயபற்பலஃதுறைமேற்கொண்டுய்ப்பினு
மேயவில்வாழ்க்கையிலிருந்துமன்னதிற்
பாயுநன்மதுமலர்ப்பதுமபாசடைத்
தூயதண்புனலெனத்தோய்ந்துந்தோய்ந்திலான். (கூ)

மனையறம்பூண்டுநல்வாழ்வின்வைகியு
மனையபல்கிளைஞரோடளவளாவியு
நனியுலகளித்துமெய்ஞ்ஞானமெய்திய
சனகனைப்போலிருந்தருளுந்தன்மையான்.

*சனைத்தூணினின்றிங்குவாவெனப்
பேசியவன்புடைப்பிரகலாதன்போற்
பாசொளிவிளங்குகோபாலமூர்த்தியைப்
பூசனைநாடொறும்புரியும்பத்தியான். (கக)

---

* துயர் என்றும் பாடம்.

கற்பவையாவையுங்கற்றுவான்வரு
பொற்புறுபலத்துளம்பொருந்துறுவகை
பற்பலநல்வினைபயின்றுகண்ணனுக்
கற்பணமாமெனவமைக்குமன்பினான். (௧௨)

கரும்புயன்மேனியான்கமலநாபியூட்
டரும்புகழ்நான்முகன்றனக்கொப்பாகவே
யரும்பொறைவாய்மைநல்லறிவின்வேலையாய்
வரும்பெருமாள்பெருவரத்திற்றோன்றினான். (௧௩)

சீதைகாதலனைத்திசைகளெட்டையு
நீதியாற்புரந்துநன்னெறிநடாத்திய
வேதபாரகன்றிருவேங்கடேந்திரன்
மாதயாநிதிபுவிமன்னர்மன்னனே. (௧௪)

பன்னருமனுமுறைபகர்ந்தநீதியா
மன்னவன்புவிபுரந்தருளுங்காலையி
லின்னருட்சற்குருவிராகவானந்தர்
பொன்னடிக்கமலங்கள்போற்றன்மேயினான். (௧௫)

ஐம்பொறிவென்றுகாமாதியாறிரு
வெம்பகைகடந்துநால்வேதத்துச்சிபிற்
செம்பொருளுணர்ந்துபல்சீவகோடியும்
பைம்புனவிரவிபோற்பார்த்துளான்றனை. (௧௬)

ஒருவடநீழலினுற்றுநால்வருக்
கருமறைபகர்ந்தருளாதிதேசிக
னிருநிலத்தெம்மனோர்க்கிரங்கிமானுடத்
திருவுருவெடுத்தெனத்திகழுவான்றனை. (௧௭)

காட்டினிலிருந்தவம்புரிந்துகாயத்தை
வாட்டியமுனிவரர்மகிழுமெஞ்ஞானி
லீட்டியசமாதியிலிருந்துபேரின்ப
வீட்டினையிதுவெனவிளக்குவான்றனை. (௧௮)

கண்டனன்குருபதகமலஞ்சென்னிமேற்
கொண்டனனங்கவன்குறிப்பைநோக்கியே
மண்டலம்புரக்குமின்வயினுமைப்பதொன்
றுண்டெனமுகமலர்ந்தினையவோதினான். (௧௯)

அறம்பொருளின்பமுமகிலத்தோர்பெறத்
திறம்படப்புரிந்தனீவீடுந்தேர்ந்தவ
ருறும்படிஞானநூலொன்றுசொல்கென
நிறம்பயிறுரினானிதுநிகழ்த்தினான். (உ0)

இல்லறம்பூண்டுவாழுமனோர்க்கது
சொல்லுதற்கெளியதோதுறவுபூண்டுமன்
கல்லுறுமுழையினுங்கானினும்புகுந்
தல்லறீர்ந்துறைபவர்க்கலதென்றோதினான். (உக)

ஓதலுமிராகவானந்தயோகியும்
போதமுள்ளோர்மனைவாழ்க்கைபூணிலென்
னேதமில்வுணர்விலாரிடைந்துகாணினும்
பேதுறுமுறையினுமிருந்தென்பேறெனா. (உஉ)

வரியுடற்பாந்தள்கன்முழையில்வைகியென்
னெரிசினப்புலிவனத்திருந்துமென்பயன்
றிரிபின்மெய்ஞ்ஞானியெத்திறத்திருந்துமென்
விரிவுறவனையநூல்விளம்புவாயென்றான். (உங)

வேறு.

அருந்தவன்பகர்ந்தமாற்றமனைத்தையுமனத்துட்கொண்டு
பொருந்துமெய்புளகம்மல்கப்பூரித்துப்புவிக்கெலாந்தன் [ந
பெருந்தனமெனவையுநல்கும்பெற்றிபோன்மற்றெல்லோர்க்கு
திருந்துநல்லறிவுநல்குந்திறத்தினைச்சிந்தைசெய்தே. (உச)

அலகில்வேதாந்தநூலனைத்தையுந்தொகுத்துநாடி
யுலகியனெறிவழாமலுருவகப்படுத்தியார்க்கு
மிலகுமெய்ஞ்ஞானநல்குமின்பமாக்கதையொன்று
நிலைபெறவுரைப்பனென்னாநெஞ்சகத்துன்னிமன்னோ. (உரு)

அம்புவிமாந்தர்க்கெல்லாமாயுளோசிறிததற்குள்
வெம்பிணியிளமைமூப்புவிழிதுயிலசோம்புகாதற்
கம்பலையிவற்றைநீக்கிக்கற்பதெங்ஙனங்கற்றாலு
தம்புலஞ்சிறிதுஞானசாகரம்பெரிதென்றுன்னி. (உசா)

அத்தனைவேதாந்தப்பாலாழியைத்தனதுபுந்தி
மத்தினாலுழக்கிமேனாண்மால்புலவோர்க்குவாரிப்

புத்தமுதெடுத்தாற்போலப்பொருவிலாஞானசார
மெத்தனையவற்றையெல்லாமின்புறத்திரட்டிவாங்கி. (உஎ)

சகத்தொருபிரபோதசந்திரோதயமெனுநாடகந்தான்
மிகுத்துரைசெய்தகிருஷ்ணமிச்சிரன்றனுநாணுப்
புகழ்த்திருவேங்கடேந்திரன்பூசுரர்குலத்துக்கெல்லாம்
வகுத்தகாப்பியமதாகவ்வடமொழியதனிற்செய்தும். (உஅ)

கற்பதற்கெளிதாய்நாவிற்கனிந்துதேனூறமேலாக
தற்பரஞ்சோதிதானாய்த்தம்முளேயுதயமாகச்
சொற்பசுந்தமிழினாலுந்தொகுத்ததைமாதைவேந்தன்
பற்பலவருணத்தோர்க்கும்பாங்குறப்பகர்தலுற்றான். (உகூ)

பாயிரம் முற்றும்.

---

## வது உற்பத்திச் சருக்கம்.

நீர்கொண்ட பெருக்கினைவெங்கானலிற்கண்டாற்போ னெடு விசும்புந்தனிலேநீரொன்றினிடத்தொன்று, வேர்கொண்டமூவுல குமதுதேரா தார்க்குமெய்யாகித்தேர்ந்தளவின்மீண்டுமவை பொய் யாந, தார்கொண்டபணியுருப்போ*லநிபிடானந்தந்தானாகி நிரு மலமாய்த்தழைத்தோங்குமொளியா, யேர்கொண்டவாத்துமபோ தந்தனையேவணங்கியிதயகமலத்திருத்தியெப்போதும்வாழ்வாம்.()

இடையிறெடுபிங்கலையூடியங்காத வண்ணமிடைநாடி நிறுத் தியகாற்றென்பதனுச்சி,யடையும்வகைபுரிந்துமுபசாந்திமிகும் யோகியகத்து நிறையானந்தமா மமிர்திற்படிந்தும், புடவிமுத லுலகெலாமபொதிந்துமிளந்திங்கட்புரிசடையோனெற்றியிற்கண் போற் காட்டுமெபரிசாற், றடையறக்காணவும் விளங்குஞ்சின்மய வுள்ளொளியே சந்ததமுமேலாகித்தழைத்துவாழியவே. (உ)

வேறு.

அத்துவிதம்வாசாமகோசர்மஞேதீதமசலமூலந்
தத்துவமப்பிரமேயஞ்சர்வசமஞ்சச்சிதானந்தஞ்சாந்தஞ்
சுத்தமவியத்தமவிகாரமனுபவந்துரியஞ்சுயம்பிரகாசம்
நித்தியநிர்க்குணமனந்தநிரதிசயம்பிரமமெனநின்றதொன்றே (ங)

---

* நிபிடானந்தம் = பூரணானந்தம்.

போந்துவிகாரஞ்சிறிதும்பொருந்தாதுதன்னியல்பிற் பொருந்திநிற்பக், காந்தமசையாதிருந்து மக்காந்தத்தெதிரூசிகம்பித்தாற் போல், வாய்ந்தவதன்சந்நிதியின்மாயைவிகாரம்புரிந்து மணிச்சூன் றூற்றி, யேய்ந்தபெயர்மானதனென்றெடுத்தோத வொருமகவை யீன்றாண் மன்னோ. (௪)

இருளதனைவொளியாக்கி யொளியதனையிருளாக்கி யின்பந் தன்னை, யரியகொடுந்துயராக்கியத்துன்பந்தனையின்பமாக்கிசெய் கை, மருளுறுமந்நெடுமாயைமார்பிலணைத்தேவளர்க்க வளர்ந்தான் யாதும், பொருவறுதன் றாதையெனுந் தருவினுக்கோர்புல்லுருவி போலவன்றே. (௫)

வேறு.

பெறலருமனையமைந்தன்பிரவிர்த்திநிவிர்த்தியென்னு
மறுவிலாமதிமுகத்துமாதராரிருவர்தம்மைத்
தறுகண்மாமாயையென்னுந்தாயுளங்களித்துநோக்க
நறுமலர்மாலைசூட்டிநன்மணம்புரிந்தான்மன்னோ. (௬)

மானதன்றனக்குமுக்திமணஞ்செய்தமனையாடன்பா
லானமோகனைப்பெற்றப்பாலாங்காரன்மதனன்மானன்
வேனில்வெங்காமன்கோபன்வெய்யமச்சரன்சங்கற்பன்
றணிராசதன்சந்தேகன்றாமதனிவரையீன்றான். (௭)

இனையமாமைந்தர்தம்மையீன்றருள்பிரவிர்த்தியின்னு
மனையவருடன்பிறப்பாமவர்கடீவினைமாதென்றும்
வினையுறுங்கபடியென்றும்வெய்துறுமகீர்த்தியென்றும
புனைபெயரநீதியென்றும்புதல்வியர்தம்மையீன்றாள். (௮)

மருவுமந்நிவிர்த்தியென்னுமடக்கொடிவிவேகன்மற்ற
நிருபகன்பொறைசந்தோடனெடுஞ்சமன்றமன்விராகன்
றருமியமாதியெண்மர்சத்துவமுதசீலன்
பொருவிலாத்தவனென்றின்னபுதல்வரியாவரையுமீன்றாள். (௯)

மதிநுதனிவிர்த்தியின்னுமயித்திரிகருணைநீதி
முதிதைநல்லுபேட்சையென்னுமொய்குழலவர்தம்மைப்
புதியபாற்கடல்வருந்திப்புவிக்கமுதீந்தாற்போல
வதிசயமெவர்க்குமெய்தவருந்தவத்தீன்றாண்மன்னோ. (௧௦)

மாயைதம்மகற்குவாய்த்தமனைவியரிருவர்தம்பா
லாயபுத்திரர்கண்மற்றையரிவையர்தங்கட்கெல்லா
நேயமாமணஞ்செய்தற்குநினைத்துமாமோகபபிள்ளைக்
கேயதுன்மதியைமுந்தியின்புறப்புணரச்செய்தே. (கக)

*ஆமிடலகங்காரற்கேயகந்தையுமணஞ்செய்வித்துக்
காமனுக்கிரதிதன்னைக்கடிமணம்புரிவித்தாங்கே
யேமுறுகொலையைக்கோபற்கின்புறவிணக்குவித்துத்
தீமைமச்சரற்கசூயைத்தேவியாப்புணர்ப்பித்தாளால். (கஉ)

டதன்மறதிக்குமானன்மணம்வெகுமதிக்குநல்கி
யித்முறைமுயற்சிதன்னைப்பிராசதற்கிசையச்செய்து
விதமுறுசோம்பற்றன்மேல்விருப்பநாமதனுக்காக்கிக்
கதமிகுசங்கற்பாறகோர்கற்பனைதனைச்சேர்வித்தாள். (கங)

அறிவிலாச்சந்தேகற்கோர்சித்தியைப்புணரச்செய்து
பிறவுநல்வரிசைமுகதபிரவிர்த்திமக்கட்கெல்லா
நிறைவுறச்செய்துமற்றநேரிழையீன்றமாதர்
மறுவுறுநால்வருக்குமணம்பெறக்கருத்துன்னி. (கச)

பின்னரும்பிரவிர்த்தியீன்றபெண்களிலனுசாரற்கு
மன்னுதீவினையதீதியைமனைவியாச்செய்து
சொன்னவெங்கபடியென்னுந்தோகையுமநீதியென்னுங்
கன்னியுமாமபியற்கடிமணஞ்செய்வித்தாளால். (கரு)

அகந்தையையகங்காரன்சேர்ந்தருமகண்மமதையோடு
மிகுந்தலோபனையும்பெற்றானிச்சையையவனும்வேட்டுத்
தகுந்திறலிடம்பன்றன்னைத்தந்தனனிடம்பன்றானு
மிகுந்தவஞ்சனையைப்புல்லிமிகுமசத்தியனையீன்றான். (கசு)

இதமுறுங்காமராசனிரதியைப்புணர்ந்துபின்னர்ச்
சுதனெனவிடயானந்தத்தோன்றலைப்பயந்தான்மற்றைக்
கொதிதழற்கொடியவாட்கட்கொலையெனும்மாதைச்சேர்ந்து
கதுமெனக்கொடியகோபன்கலகன்வந்துதிக்கச்செய்தான். (கஎ)

---

* மாமிடல் எனவும் பாடம்.

## மெய்ஞ்ஞானவிளக்கம்.

அச்சுறுமதன்றனக்கோரனத்தனைமறதிபெற்று
ணச்செனுமனத்தனுக்கோசனைக்கெடுதிதந்தாண்
மச்சரற்கருமையையீன்றாள்வயிரனைவயிரன்றேவி
யிச்சகத்தமரியாதையெய்துமக்கிரமனையீன்றாள். (கஅ)

மானனுக்கிசையவாய்த்தமனைவெகுமதியென்றோதும்
மீனெனமிளிருமைக்கண்மெல்லியல்வயிற்றில்வந்தான்
றோனொருற்சாகனென்னத்தகுமியுற்றனையன்பின்ன
ரீனகற்பனைசங்கற்பற்கீன்றனள்விகற்பன்றன்னை. (க௯)

விகற்பன்யோசனையைச்சேர்ந்துவெகுமுகன்றன்னைப்பெற்றான்
றகைத்திடுங்கலக்கன்றன்னைச்சந்தேகற்கசித்தியீன்று
ணிகழ்த்துதாமதற்குச்சோம்பிநித்திரைவஞ்சியோடே
திகைத்துமச்சிரத்தைதையென்னுஞ்சேயிழைதனையும்பெற்றாள். (உ0)

முடிவுறுவிராசதற்குமுயற்சிபாற்சிரத்தையென்னுங்
கடிமலர்க்குழலிமற்றோர்காரியனுடன்வந்தாளா
லடைவுறுவஞ்சாரற்கோரகீர்த்திபான்மிச்சாதிட்டி
யுடனொருவிடயசந்தனுதித்தனன்கணத்துமாதோ. (உக)

சஞ்சலனதன்மனென்னுந்தனையிறைக்கபடிதன்பா
லஞ்சலில்கலியன்பெற்றானவன்மகனதன்மன்றானு
மெஞ்சலிலதோகதிக்கேயின்புறப்புணர்ந்தெப்போது
துஞ்சலில்லாதபொல்லாத்துக்கனுற்பவிக்கச்செய்தான். (உஉ)

அததலைப்பிரவிர்த்திமக்களதிமோகன்முதலாயுள்ளோர்
மெய்த்துறுமணமுமன்னார்வியன்மக்கட்பேறுஞ்சொன்னோ
நித்தியரானமற்றைநிவிர்த்திசெய்விவேகனாதி
யுத்தமர்மணமுமன்னார்க்குதித்தமக்களையுஞ்சொல்வாம். (உங)

சுருபநல்விவேகவேந்தன்சுமதியைமணந்தான்பின்னர்
நிருபகனுத்திமாதைசேர்ந்தனன்பொறையன்வேட்டான்
வருமியலுறுதிமாதைமகிழ்ச்சிக்குமணஞ்சந்தோடன்
றகுமுனஞ்சமன்றமன்போய்ச்சாந்திதாநதியைச்சேர்ந்தாரால். ( )

விரத்தியைவிராகன்சென்றுமேவினன்சுசீலன்றன்பால்
வரப்பெருங்கீர்த்திவாய்த்தாண்மகிழ்தவனல்விருத்தி
தரத்திருமாலைபூண்டான்சத்துவன்புனிதைக்குள்ளம்
பொருத்தினனயிஞ்சைதன்னைப்புணர்ந்தனனியமன்றானே. (உரு)

மருவுமப்பிரமனென்றும்வயங்குமாத்திகனென்றுமபேர்
தருபவர்வந்தபின்னைச்சமாதிக்குந்தன்னிலைக்கு
நிருவிகற்பனும்மற்றேதுநிகழ்த்துறுமோனன்றனும்
கருவுயிர்த்தெழுந்தார்யாருங்கண்களித்தினிமைகூர. (௩௪)

கதிகொள்காசிபனைமேனாட்காதலாற்றிதியுந்தூய
வதிதியும்புணர்ந்தாகல்குமரருஞ்சுரரும்போல
முதியவண்மோகன்முன்னைமூடருமிளையாளீன்ற
மதியுடைவிவேகனாதிமக்களும்வளருங்காலை. (௩௫)

வனைந்தபூங்குழலாண்மாயைமகன்புணர்மடந்தைநல்லா
ரினந்தரும்புதல்வரீட்டம்யமுனைமாநதி மீசன்
புனைந்தவானதியும்போலப்புடைபரந்திலங்குந்தோற்றங்
கனிந்தகண்களிக்கப்பார்த்தோர்கைதவங்கருத்துட்கொண்டாள். ( )

உற்பத்திச்சருக்கம் முற்றிற்று

ஆக விருத்தம் ௩௫.

---

## ௨-வது, மோகனராசாட்சிச்சருக்கம்.

மேவுநங்கணவன்யாவும்விடயத்துவிருப்பமில்லா
னேவிலாவிள்மைபெற்றுமொருபோதுமெம்மைநோக்கான்
மூவகையுலகங்காக்குமுதன்மைநம்புதல்வற்காக்கிக்
காவலன்றன்னைநீத்துக்களித்துமென்றகத்துட்கொண்டாள். (௧)

தனையுவந்தீன்றமாயைதன்குறிப்பறிந்துமைந்தன்
புனைதருநவத்துவாரபுரங்கள்பல்கோடிகண்டு
தினையளவளவைத்தாகச்சிவபல்கோடியாக்கி
யனையதன்றாதைதன்னையங்கங்குச்சிறைசெய்தானல். (௨)

இடம்பெறுஞ்சோதிரூபமேகமாகியும்பல்கோடி
யுடம்புகடோறுமங்கங்குறைகின்றதெவ்வாறென்னிற்
படர்ந்தொளிபரப்புஞ்சோதிப்பரிதியொன்றயுந்தெண்ணீர்க்
கடந்தொறுமோரோர்விம்பங்காட்டுதல்போலுமன்றே. (௩)

அருஞ்சிறையனையவண்ணமாங்கவனிடுதலோடும்
பெருந்திறன்மோகாங்காரர்பிதாமகன்றன்னைப்பற்ற
விருந்திறற்காமனாதியிளைஞருநெருக்கிப்பின்னும்
வருந்தவாசாதிபாசவகையினாற்பிணித்தார்மன்னோ. (௪)

மாசறுமாயைப்பாட்டிவஞ்சனைநினைந்தவாறுந்
தாய்செயலுணர்ந்துசேய்மூதாதையைத்தகைந்தவாறு
மாசைவன்கயிற்றாற்காமனாதியோர்பிணித்தவாறு
மீசனுமிடரிலோனுக்கிடர்வந்துவிளைந்தவாறும். (௫)

கண்டகங்கலங்கிவெய்யகண்டகர்புரிந்தவஞ்சம்
பண்டைநூனெறியிற்சொல்லும்படியன்றிப்பழியையாரோ
விண்டனைசெய்யவல்லார்விழுமியதருமநீக்கிக்
கொண்டவெம்பாவத்தோரைக்கூறினும்பாவமன்றோ. (௬)

எனவிவைவிவேகனுன்னியியம்புவன்றருமமென்னு
மனமெனுந்தாதைபாதம்வணங்கிநிற்பயந்ததாதை
தனையிருஞ்சிறையிலிட்டுத்தாயெனுமாயைவஞ்ச
நினைவினதியற்கைசெய்தனெறியன்றென்றினையுசொன்னான். (௭)

தருமமாவதுவேயின்பந்தருமலாற்றருமநீக்குங்
கருமமாவதுபோற்றோன்றிக்காட்டினும்பசுமட்பாண்டத்
தருமையாய்நிரப்புந்தெண்ணீரனைத்துமப்பாண்டத்தோடு
மொருமையாய்க்கெடுதலேபோன்றொருகணத்தழியுமன்றே. (௮)

அன்னநல்லறமயாதென்னிலரியமுற்றுதைத்தானே
தன்னருட்டெய்வமென்னுந்தன்மையத்தன்மைநீக்கிப்
பின்னபின்னங்களாகப்பேதகம்பிதாவைச்செய்தன்
மன்னநிற்கியல்போவென்றான்மானதனதற்குச்சொல்வான். (௯)

அன்னையானவடாதைக்குமதிகமன்னையும்பிதாவு
முன்னையோர்தெய்வமென்றமொழிக்கெவர்முதன்மைபூண்டார்
பின்னொராச்சிரமத்தேதகிட்பிதாவையும்வணக்கங்கொள்ளுஞ்
சன்னியாசிகளும்வந்தத்தாயரைத்தொழுவரன்றே. (௰)

அனையதாதலினாலீங்கெனன்னைதன்னகத்துட்கொண்ட
நினைவினதியற்கைசெய்தனீதியுந்தருமந்தானு
மெனவிவையுள்ளத்துன்னியெண்ணிலாவத்துவார
மனைதொறுமெந்தைதன்னைவைகுவித்தனன்யானென்றான். (௧௧)

உரைசெயுமச்சொற்கேட்டவுயர்மதிவிவேகன்றூயர்
விரைசெறிகமலப்பாதமேன்மையோர்வணக்கஞ்செய்த
லரசினைத்துளவந்தன்னையாவினைவந்திப்பார்போற்
புரைதவிர்வணக்கமல்லாற்புத்திகேட்பதனுக்கன்றே. (௧௨)

நன்றுநன்றிதுவிவேகநமக்குநந்தமர்க்குநீயே
யன்றிவெம்பகைமற்றுண்டோவருங்கிளையோடியானும்
பொன்றுவதியற்றியெந்தப்புவனமும்பெறுபோவென்றே
மூன்றெழுதருகினின்றமோகனைப்பார்த்துச்சொல்வான். (௨௯)

எந்தையைச்சிறையான்செய்யவெண்கருத்துணர்ந்திறுக்கிப்
பந்தனஞ்செய்துசூழ்ந்தபல்கிளையவற்றினோடும்
வந்தனம்புரிந்துமற்றென்வாய்மொழிதலைமேற்கொண்ட
சுந்தரமைந்தநின்போற்சுபுத்திரனொருவருண்டோ. (௩௦)

சாலவுமுப்புமுற்றித்தளர்ந்தொருசார்வுமின்றி
யாலமாமரம்போனின்றேற்கம்மரத்துதித்தவீழ்போன்
மேலுயர்பணைகளென்னவிளங்குநங்கிளைகளெல்லாம
பாலநீயலதாரிங்கென்பரங்கெடப்பரிக்கவல்லார். (௩௧)

என்பனபலவுங்கூறியெடுத்துமார்பிறுகப்புல்லி
முன்புநின்றன்புகூருமோகமாமதலைக்காங்கே
யின்புறுங்காமனுதியிளைஞருஞ்சாருவாகன்
மன்பெருங்கலிகபாலன்மற்றையோர்முற்றுஞ்சுற்ற. (௩௨)

சந்ததியெனக்குநீயேதந்தனனுலகமியாவு
மைந்தநீகோடியென்றேமாமணிமகுடஞ்சூட்டி
யெந்தையைவெளிப்படாமலிருஞ்சிறைப்படுத்தியென்னோ
டந்தமிலூழிகாலமரசியல்புரிதியென்றான். (௩௩)

பின்னரும்விவேகனோடும்பெற்றதாய்நிவிர்த்திதன்னை
யென்னரும்பகைஞரொன்றேயிகந்தனனின்றுதொட்டு
நின்னரும்புவியினோர்பாணிற்கவுமிடங்கொடாம
லன்னவரினத்தையெல்லாமகற்றுதிபுறத்திலென்றான். (௩௪)

தாதைதன்கருணையேவறன்றலைமீதுதாங்கி
மேதகுநிவிர்த்தியோடும்விவேகனையகலத்தள்ளிப்
பூதலமுதலாவுள்ளபுவனங்களெவையுங்கைக்கொண்
டேதும்வேறினையிலாமலினிதுவீற்றிருக்குங்காலை. (௩௫)

மோகனராசாட்சிச்சருக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம்-௧௦௦.

## ௩ - வது, அவித்தியாபுரச்சருக்கம்.



அளவிலாக்கொடியோரோங்கியடர்த்தலாலருள்விவேக
னிளைஞருங்கிளையுந்தானுமினியதன்சுமதிமாதுந்
தளர்வுறுநிலையராகித்தாவில்புண்ணியத்தலங்க
ளுளவெவையவைகடோறுந்தனித்தனியொதுங்கிப்போனார். (௧)

அந்தமிலறத்தோரியாருமருந்துயர்கூர்தலாலே
யுந்துவெண்டிரைசூழ்ஞாலத்துயர்திசைதோறும்வைகு
மிந்திரன்முதலாவுள்ளவிமைப்பிலாவிமையோரெல்லாந்
தந்தமக்கியன்றதானதானம்விட்டோடிப்போனார். (௨)

பகைபிறிதின்மையாலும்படர்ந்ததன்கிளைஞரோங்கு
மிகைவலிச்செருக்கினாலுமேவியசெல்வத்தாலுந்
தொகையறுதீமைத்தேவிதன்மதிவாய்மைதன்னை
யிகலுடைமோகவேந்தனின்னனகருமஞ்செய்தான் (௩)

வேறு.

கல்லாமைகொலைதீமைகளவாசையின்சொற்
சொல்லாமைநடுவின்மைசுடுகோபமிவையே
யல்லாமலறமேதுமறியார்தமுளமாம்
பொல்லாவவித்தியாபுரமொன்றமைத்தான். (௪)

அம்மாநகர்க்குளளவரஞ்ஞேதவெளிதோ
தம்மாதுலன்பெண்டிர்தாய்தந்தைமகவென்
றிம்மாமயக்கஞ்செயினமாவததுவே
விம்மாவெழுந்தாழவீழ்விக்குமகமே. (௫)

ஒழியாதசிவனுக்குமுவணத்திறைக்கும்
பழியாதுமில்லாதபதுமாசனற்கும்
விழியாயிரங்கொண்டவிண்ணோர்பதிக்கு
மழியாதசங்கற்பமகிழ்சூழ்ந்தமதிளே. (௬)

இன்னானியானின்னனிவனென்மனையென்
பொன்னுடையென்வாழ்வுபொருளென்குலத்தோர்
மின்னுருமென்பூணென்விளைபூமியெனவே,
பன்னுமொழிகின்றபதணங்கொள்வதுவே, (௭)

பின்னுங்கொடிக்காதல்பிரியாதுளுணர்வா
முன்னுங்கொடாரிக்குமுள்ளொன்றுசிறையா
துன்னுங்கொடுந்தீயொழுக்காமிழுக்கே
துன்னும்பெருங்காடுசூழ்கின்றதவே. (அ)

அடைவொன்றுமைந்தாவியகலாதொர்பொழுது
நடைசென்றுபடர்கின்றநன்காவலுடனே
விடயங்களெவையேனும்வெளிகாணுமுன்போய்ப
புடைமண்டியெறியும்பல்பொறிகொண்டதுவே. (கூ)

குலகோபமடுவுற்றகொலைபாதகத்தோ
ரலகோடிமறமன்றியறமொன்றுமுணரா
ருலகோடகொடியின்கணுடன்மீளும்விசையா
பலகோடிபடைவீரர்பதிகொண்டதுவே. (10)

அயராமலெதுபெற்றுமமையாமன்மேன்மேற
பெயராமல்வளர்கின்றபிழைகூரவாவா
முயல்வானமறியாதுமுடிகாணவரிதா
வுயர்வானகிரிதுர்க்கமொன்றுள்ளதுவே. (கக)

கோரகவேசெல்லுநெறியின்றியறமுற்
றோராதுதிரிகிச்செகடறுகோணலுளவா
வாராதவறிவின்மையதுவல்லதெவையுப
பாராதகுடிலங்கொள்பலவாசலுளவே. (கஉ)

வேறு.

காலிரண்டுநிறுத்திமேலிருகைபிணைத்தொருபுறமேவும
பாலிணக்கிமுகட்டுமேல்வளையடர்நரம்பெனுமாக்கையாற்
கோலியிட்டபழுக்கழிக்கொருகுறையுமல்வரிநதுமேற்
றோலிணக்கியகற்றைவேய்ந்துயர்சுவர்புலால்கொடியற்றியே. (க)

வந்துபோகவிரண்டுவாசல்வகுத்துமற்றெழுசாளரந்
தந்துசாக்கிரமாதியீரிருதளமெடுத்ததன்மேன்மலர்க்
கொந்துலாவியமாமுடிக்கனகும்பம்வைத்தவிர்கூந்தலா
முந்துநீள்கொடிமாடநாலுமுகக்கண்மாளிகைமுற்றினன். (கஈ)

வேறு.

மீதிற்காணும்பசும்புற்பனியெனமின்மினிக்குமொளியென
வேட்கைகூர், வானகக்காமினிசஞ்சலநெஞ்செனமாறிமாறி வருக

ண்ணிமையெனா, ஆறைநக்காவெறிநீர்மேற்கூம்பிமெனவும்பர்மேகத்
துமின்னெனவோர்கணா, போதைக்காயிரமாளிகைகட்டிவீண்
போக்கிப்போக்கிப்புதுமாளிகைசெய்வான். (கரு)

வேறு.

அனையமாமணிமாளிகைக்குள்ளமைத்தநெஞ்செனுமாசனத
தினியதுன்மதியென்றதேவியொடேறிவைகினனெண்ணிலா
வினையமவல்லிதொர்மோகனென்றுசொல்வேநனன்னவன்மேன்
மையா, நினையுமாத்திரிதாயினுஞ்சிவநிபரிலாநெறிபகருவாம. (கசு)

வேறு

வாதித்திருந்திரன்வச்சிரவாணமுனைவசய்ம முயநமலையரிநதாவெ
னச், சேதித்தற்குருசிறைதயாமறபாரிநதுந்திரண்டகல்லினுருசிக்
கென்றசிவதையான், போதிசெமரொற்சுவட்டமெருவைச்சுற
திக்கங்குரெசெல்நின்றமனிரண்டதீதநற்குமகலாதவல்லிருள
ளைத்துங்கூடிபொருவர்வாயினேன். (கள)

நகையுளாக்கிமெனடுமரப்பாவைதனதுசைக்கிவுநாவசைந்
நின்றிலான், வசையுளாக்கின்மயிர்க்காலுங்காரொருவாய்கொ
லோவெனவார்த்தைசொல்வாயினன் மைசயகற்றியதன்பழிகாண்
புழிச்சார்வையோதிருநாட்டிரனாயினே,னிசைவிலக்கிபிறர்பழி
நோக்கிற்பணிஙாருந்துறுமடையிற்றிரனாயினேன். (கஅ)

புகலுவார்பெருவம்புளகொடிபோய்புகுநதிருக்கின்றபுற
ரெப்பதாயினும், திகழுவாரறநுண்ணூணுமைந்திப்றசெல்கிலாவ
ச்சிரச்செவித்திண்மையா, னிகழ்வதாயிமைபோதுமிலக்கின்றி
யேகும்வாழ்வுமியாக்கையுநோக்கியு, நிகரிலாவிவைநீடுழிகாலமு
நிற்பதாகநினைக்குநினைபபினன். (கக)

ஏற்றவர்க்கொன்றையீயவெனறூற்குறைநதிரண்டுகையுமிழந
தவனாயினேனை, மேற்றனக்கென்னவேற்புழிக்கார்த்தியவீரியார்ச்சு
னன்வெட்கும்பல்கையினாூ, ஆற்றுநல்வழிச்செல்வுழிக்கான்முட
மாகுமைநதனவனெனவாயினேன், மாற்றுந்தீவழிசசெல்வுழிச
செமபொன்மால்வரையைச்சூழ்கதிர்மண்டலமபோன்றுளான். ()

பாவகன்மமாம்வெந்நீரின்மூழ்கிமேற்படர்வழுப்பெரும்பட்டாடைசாத்திப்பின், மேவுகின்றவவகுணப்பல்பணிமீதுபூண்டுவிடாததுர்வாசனைப், பூவணிந்தபகாரமெனுஞ்சந்தம்பூசிப்புன்மையாம்போனகந்தன்னையுண், டாவதற்றகுடிலத்தண்ணீர்குடித்தடர்பிறப்பிறப்பூஞ்சலினுடுவான். (உக)

வேறு.

விதிதனக்கதிலையென்னினுமுயற்சிகொடுவிரவுதுன்
மதிநடத்தயமலோகபரியந்தமிசைவாவியே
கதிவிசைக்கொடுசுழன்றுலகமுழுதுமொர்கறங்குபோ
லெதிருறக்கடவியிகலுமவனொருவிடயவிரதமே. (உ௨.)

சொற்பொறைத்தருவைவேரறமடித்தினியசுகுணமாம்
வெற்பிடித்தறமெனுங்கதலிமாய்த்துமிகமேன்மையோ
ரற்பெனத்தகையவோடையிடைபுக்கநுகலக்கிமே
விற்புடைக்குமவனேறுமருளென்னுமதயானையே. (உ௩)

வேறு.

உற்றபொருள்பற்றியிகல்வெற்றிகொளமுற்றுமமதையுன்னிமா
நற்றனுவினம்பிறெடுவாயுகதியும்பிறவுநாணவேழ்
கற்றடமுமேழ்கடலுமேழ்புவியுமங்கொருகணத்திலே
சுற்றிவருமற்றவணியற்கவலையர்குமொர்துரங்கமே. (உ௪)

மாதவனிடத்துமதிவேணியனிடத்துமலர்வன்சமேல்
வேதனிடத்துமுனிவோர்தமதிடத்துமெதிர்மேவியே
மூதறிவையெற்றியுறுகாயம்வருவிக்குமொருமோகன்வெம்
பாதகமியற்றும்விபரீதநெறியாகியபதாதியே. (உ௫)

எண்டிசையுமேழ்கடலுமெட்டுமலையும்புவனமேழிரண்
டுண்டெனவயங்குதொகையுங்குலவுபாதலமுமும்பரு
மண்டலமுமெங்கணுநடந்துதடையின்றிவிசைமண்டியே
யண்டபகிரண்டமுமயக்குநெடுமோகனவனேணையே. (உ௬)

செங்கதிர்நெடுங்கிரணமெள்ளளவுமெங்குமதுதெரிவுறா
தங்கணெடுவானிலிருண்மேகபடலம்படருமமைதிபோற்
பங்கமறுமீசனொளிர்சோதியிலகாதவகைபகலினுங்
கங்குலெனவேமிசைகவிக்குமதிகேடெனுமொர்கவிகையே. (உ௭)

சாலவழலுந் தழலினுங்கொடியதாந தவுரைதக்கதீ
மேலுருவினைச்சுடுமெதல்லதருவத்தையும்வெதுப்புமோ
வாலமெனவெங்கணுமடர்ந்தபடுபாதகனவன்கொடுங்
கோலினதுவெம்மை*யெவருக்குநினையிற்றழல்கொளுத்துமே. ()

வேறு.

இத்தன்மையயாவுமியைந்துலகேழுமேழுந்
தத்தந்திறைகொண்டெதிர்வந்தடிதாழ்ந்துபோற்றச்
சித்தங்களிகூர்ந்துதன்றன்மதித்தேவிசெவ்வாய்
முத்தந்தருமின்னின்மூழ்துண்டுமுயங்குநாளில். (உகூ)

ஆங்காரன்மலர்க்கணைக்காமனடுத்தகோபன்
றீங்கானவுலோபன்மதத்தசெருக்கன்மான
னீங்காதவதன்மனெடுங்கலிகீடிடம்பன்
வாங்காதவசத்தியனாதியர்மற்றையோரும். (௩0)

வருகென்னுமுன்வந்தனர்வந்துவணங்கிநின்று
கரபங்கயமுச்சிமுகிழ்த்தருட்கண்ணினோக்கந்
தருகென்றனரங்கவருக்கெதிர்தக்கதக்க
வுரைதந்தயல்சூழவிருத்தியொருண்மைசொல்வான். (௩க)

நந்தாதைநமக்கவனேழிருஞாலமெல்லாந்
தந்தாளுதியென்றனனன்றதுதக்கதென்றே
பைந்தார்முடிசூடினன்யான்பகைபற்றறுத்துச்
சிந்தாகுலமாற்றுவதுங்கடிறத்தினன்றோ. (௩உ)

என்னுவியுமென்கணுமிங்கெனிரண்டுதோளு
மன்னாரனைவீருமுமைத்துணையாய்ப்படைத்தேற்
கொன்னாரிகலெங்குளதோர்சிறிதுள்ளதேனு
முன்னாகநமக்கெதிர்வந்ததுமூளுமன்றே. (௩௩)

எள்ளிற்சிறுபாதியிற்பாதியதென்றதேனுந்
தள்ளப்படுநுண்பகையென்றுதவிர்ப்பதன்றான்
முள்ளிற்பெருவன்மரந்தன்னைமுளைக்குமுன்னே
கிள்ளிற்கெடும்பின்புகுடாரிக்குங்கேடுறாதே. (௩௪)

---

* உயிருக்கும் என்றும் பாடம்.

நாகக்குருளைச்சிறுபற்படுநஞ்சினாலும
மேகக்கரடக்களியானையும்வீநதுசாயும
வாகைச்சிமானிடராற்சிலவானரத்தா
லேகுற்றதிராவணனுவியினத்தொடன்றே (௩௫)

வேறு.

இனையதன்மையதாதலின்விவேகனையினிநீர்
தினையினுஞ்சிறுதன்மையனென்றுளாநிறமாபி
யனைவருஞ்செயலயர்த்திடாதாங்கதற்கேற்ற
வினையமும்பெருஞ்சூட்சியுங்கைக்கொளவேண்டுமே. (௩௬)

ஈதுதக்கதென்றுரைத்தபொறக்கேட்டெழுநதிரநு
மாதுகாதலன்மன்னனைமலர்க்கரங்கூபபிச்
சோதிவாண்முகநோக்கிநின்னருட்பணிசுமக்கப
போதுவோமெமக்கெபபணியுரைக்கினும்பொருளோ. (௩௭)

ஈரமுற்றொருநல்லறிவெனுமனமியங்கும்
பேருடைப்பிரமாதியர்மூவர்க்குமபிறர்க்கும்
பாரமுற்றெழுமெண்ணிலாநின்பெரும்படையி
லோரொருத்தரேவெவவதற்கமையுமாலுலகில். (௩௮)

மிடையும்வல்லகங்காரனேமுதலியமேலோர்
படையுமுநதிடவேண்டுமோநின்னருட்பணியா
லுடையநல்லறிவொருக்கியரோழெனுமுலக
மடையவெல்வதற்கடியனேனிருக்கவுமையா (௩௯)

ஆயினுந்திருவருட்படி யேயனைவோரு
மேயசெய்வினைமுடித்துமால்விடை தருகென்று
மேயதாட்டுணைவணங்கியகாமனைவியநது
நாயகன்சிறப்பவரவர்க்கிவைசெயநயநதான். (௪0)

கொடையிலாண்மையிற்கேண்மையிற்பொருவருங்குணத்திற்
படையிற்சீர்மையிலொழுக்கத்திலெவ்வையும்பழிக்கு
நடையிற்றூய்மையில்வாய்மையிற்றுகரீகத்திற்
றடையில்செய்கையிற்றவத்தினிற்பெரும்புகழ்தன்னில். (௪௧)

நிதியின்மேன்மையிற்குலத்தினிற்பெருநியமத்தி
லதிகன்யானெனுஞ்சிறப்புமேற்கொண்டகங்கார
னெதிருறுஞ்சமன்வலிதொலைத்துலகெலாமெய்திப்
பதிகொளும்படிதவுடமேவுதியெனப்பணித்தான். (௪௨)

மகரகேதனமதிக்குடைவாரிவார்முரசு
நிகரில்கோகிலக்காளமந்தானிலநெடுந்தே
ரிகலுமாவிருள்யானைபைங்கிளிப்பரியிரண்டு
சிகரபாளிதக்குங்குமப்பூண்முலைச்சேனை. (௪௩)

மலருமைங்கணைகருப்புவிற்சுரும்புநாண்மடல்வா
ளலகில்பல்சிறப்பனைத்துமக்காமனுக்களித்தெவ்
வுலகினுந்திறனிருபகன்புகாவகையுடற்றி
யிலகுதேவியோடிருத்திபோய்க்காஞ்சியிலென்றான். (௪௪)

கறிக்கும்பற்பணிற்கட்பொறியனற்கணைபுரூர
நெறிக்குந்திண்சிலைநெட்டுயிர்ப்பாம்விசைநெடுந்தேர்
செறிக்குமெய்க்குறுவேர்வுடற்கவசம்வாய்த்தீச்சொற்
றறிக்கும்வெற்றிவாளுரப்பொலிக்கொற்றவெண்சங்கம். (௪௫)

மற்றும்பற்பலவுரிமையக்கோபற்குவழங்கி
யுற்றதேவியுன்மகனொடெவ்வுலகமுமுலாவிப்
பற்றறும்படிபொறைமுதலோர்பகைபடுத்து
முற்றும்வாழ்திபோயவனதேயத்தென்றுமொழிந்தான். (௪௬)

கேட்டிரப்பொலிப்பல்லியம்பல்சுமைக்கிரீட
மோட்டுமைக்கடன்மரக்கலத்தேர்பலியுடைவா
டாட்டுணைக்கதிவாமபரியப்பரிதனக்கே
யீட்டுஞ்சீவிதம்வனமலைநாடுமற்றெவையும். (௪௭)

கொடுத்துலோபனுக்கோத்தநன்முகமனுங்கூறி
யடுத்தநின்மனையாசையோடணுகிநீராடை
யுடுத்தபார்தொறும்விராவனும்விரத்தியுமொதுங்கக்
கெடுத்துவாழ்திபோய்க்கேரளதேயத்திலென்றான். (௪௮)

சாற்றும்வீறெனும்யானைசிங்காரமாந்தடந்தே
ராற்றுபொய்வணக்கடுஞ்சிலைகுடிலச்சொல்லனலம்
பேற்றுமுட்கவட்டொழுக்கமாமிவுளியென்றினைய
கூற்றெனுந்திறலிடம்பனுக்குடன்படக்கொடுத்தே. (௪௯)

நினதுவஞ்சனைத்தேவியுநீயுநின்மகனும்
வினையசத்தியன்றன்னொடெவ்விடத்தினுமேவி
நினைவிலையுறத்தனையனைமெய்யனைநீக்கி
யனையகாசிமாநகரில்வீற்றிருத்தியென்றறைந்தான். (௫௦)

மனத்தெழுங்களிப்பெனுங்கரியெவரையுமதியாத்
தொனிக்கடும்பறைதன்னைமேலேற்றுமாதுரங்க
மெனைத்துமம்மதற்கிந்தகங்காரனுக்கியன்ற
வனைத்துங்கொள்கவென்றவற்குளவரிசையுமளித்தே. (௫௧)

மறதியென்னுநின்றேவியோடுலகெலாமருவி
யறிவுறுந்தகையடக்கனைவேறொடுமடக்கிப்
பிறிதுமுள்ளவெம்பகையையுந்துரந்தென்றுமபேரா
துறைதிபோதிகோதாவிரிதீரத்தென்றுறைத்தான். (௫௨)

கெடலறிந்துமேலோரொடும்பொரன்மதக்கரியென்
படினுமற்கடமுட்டிபோற்பிடிப்பதாம்பதாகை
யிடையின்முன்புணர்காரியஞ்சிதைந்துயிரிறினுந்
தொடர்வதல்லதுவிடாமையாம்வேகமாதுரங்கம். (௫௩)

ஊனத்தனுக்களித்தானியுநாசனுமாகும்
வினைத்தன்றேவியும்பிள்ளையுங்கொடுபுவிவென்று
தனிக்குமற்புதையன்பிராணையாமன்சத்து
வனைத்துரந்துகன்னடதேயம்புகவகுத்தான். (௫௪)

எவர்நலத்தையும்பழிப்பதாம்பல்லியமின்ப
மவரவர்க்குறிலதுபொறாதமைகணையடுத்தோர்
சவைதனிற்புகிற்றரித்திடாக்காற்பரிதனித்தேர்
கவலையுட்கொடுபோர்த்தழுக்காறெனுங்கவசம். (௫௫)

மச்சரற்கிவைமுதலியயாவையும்வழங்கி
யிச்சையுற்றிடுமகளையையோடுலகெலாமெய்தி
யச்சமுற்றசந்தோடனைமகிழ்ச்சியையகற்றி
நச்செனும்படிமராடதேயத்துறநவின்றான். (௫௬)

மூகத்திருப்பெனுமுடிக்குவாம்பரிமிகமுறுகி
யகங்கறுப்பதாங்கவிகையாகட்டுமென்றதட்டிப்
பகர்ந்திடுந்தொனிக்கடும்பறைப்பிரதிக்ஞையாம்பதாகை
தகைந்தடிக்கடிதலையசைக்கின்றதோர்*சவரம். (௫௭)

கமையுறுவயிரனுக்களித்துலகெலாங்கடந்துன்
னமரியாதையாலக்ரமப்பிள்ளையாலனையர்
சமதிருட்டியைநியாயனைத்தடுத்தவிரோத
னியல்கெடுத்துநீயிருத்தியாற்கிராதநாட்டென்றான். (௫௮)

*சவரம்=சாமரம்.

வழுவிலோரையுந்தாழ்வதொன்றின்மையாமகுட
மெழுவதின்மையாம்பீடம்வந்தெவர்தொழுதிடினுந்
தொழுவதின்மையாங்கங்கணமுனைநெடுஞ்சுடர்வேல்
குழைவதின்மையாங்கயமிருமாப்பெனுங்கொடித்தேர் (௫௯)

இனையயாவையுமானனுக்கீந்தவனில்லவ்ள்
புனைமலர்க்குழல்வெகுமதிதன்னொடும்புருந்தே
யனைய்தாந்தியோடருந்தமன்றன்னையுமடக்கி
வினையின்மேற்றிசைச்சோமநாதத்துறவிடுத்தான். (௬0)

மறித்துநொய்யவர்தம்மையுந்தாழ்வதாமகுடம்
புறத்துளோர்புகலிகழ்ச்சியுங்கேட்பதாம்பொற்பூண்
செறுத்துளோரொடுந்தங்குறைசொல்வதாந்திமிலை
குறித்தசெய்கைமுற்றாமையாம்விகடமாக்குதிரை (௬௧)

மருவுவெய்யசங்கற்பனுக்கிவையெலாம்வழங்கி
யரிவைகற்பனைத்தேவியோடவனியிளாவி
நிருவிகற்பனுநிலைமையுமுறுவகைநெருக்கிப்
பொருவிலகுச்சர்தேயமீதுறைகெனப்புகன்றான். (௬௨)

மண்டலங்கரிபரிகுடைசிவிகைமர்மகர
குண்டலம்புனைபல்கலன்பெருநிதிக்குலவகள்
கெண்டையங்கண்மின்னார்பெருஞ்சேனைபொற்கிரீடங்
கண்டலம்புகாவனுமனோராச்சியக்காணி. (௬௩)

பகருமற்றிவைவிகற்பனுக்கீந்துநின்பாலன்
வெகுமுகன்றனுலகமுகன்றன்னையும்விலக்கி
மகிழும்யோசனைத்தேவியோடெங்கணுமருவிப்
புகலுநின்றிருத்தாரதையோடுறைதிபோவென்றான். (௬௪)

எவ்விடத்தினுநிலைபெறுதியங்கலாமிரதங்
கவ்வையுற்றிடுமயக்கநீங்காமையாங்களிமாச்
செவ்வொழுக்கம்யாரிடத்துந்தேர்வின்மையாந்திறல்வா
ளவ்வையொத்தவர்தம்மொடும்போர்செயலனிகம். (௬௫)

இசைக்குமற்றிவையாவுஞ்சந்தேகனுக்கீந்து
னசித்தியும்மகன்கலக்கனுமாயுலகனைத்தும்
விசித்திநிச்சயனையுமுன்றன்னையும்விலக்கி
முசித்திடாமல்வாழ்ந்திருத்திகொங்கணத்தெனமொழிந்தான். ()

தடையறும்படியெங்கணும்வைகுறுஞ்சயனம்
விடுகுறட்டுவெம்பல்லியங்கனவிடையின்று
ருடல்பெயர்ப்பதாஞ்சகடகெட்டுயிர்ப்பெனும்வாசி
யிடருறுத்தினுந்தேர்கிலாதின்புறும்யானை. (௬௭)

சொன்னயாவையுந்தாழதற்கிந்துநின்சோமபி
யென்னுமாதுநித்திரையெனுங்கன்னியுமெய்த
வன்னசத்துவன்புணிதையிவ்வுலகுறுதகற்றிப்
பன்னுதென்றிசைப்பாண்டியின்வைகெனப்பணித்தான். (௬௮)

வினவுறுதுற்றநட்டையுமறப்பதாம்விருது
மனதில்யாரையுமதித்திடாதிருப்பதாம்வடிவா
டனதுசெய்வினைக்கதிவிடாதியற்றலாகதனித்தே
ரினிமைகேட்கினுங்கேட்கிலார்போல்வதாம்யானை. (௬௯)

இத்தகைச்சிறப்பிராசதற்கேதுலகெவையு
முத்தியோகனுமுயற்சியுந்தொடரநீயுலாவிச்
சத்துவன்றனைவிரத்தியைவிராகனைத்தள்ளி
மெய்த்துவாழ்திகன்றடகநாட்டெனவிதித்தான். (௭0)

தாமதச்சிரத்தையுமிராசதச்சிரத்தையுமா
மாமடந்தையர்க்கேற்பனயாவையும்வழங்கி
நாமசத்துவச்சிரத்தையைத்தொலைத்தெந்நாட்டுங்
காமசத்திரமெனவழங்கும்படிகழறி. (௭௧)

இந்தியங்களையெங்கணுஞ்செலுத்துறவிரத
முந்துநன்முறைக்கேடெனுமதகரிமுறையோ
டந்தநல்வழிச்செல்வுறுவாசிநாவடக்கா
தெந்தவன்சொலுஞ்சொல்வதாங்கடும்பறையெவையும். (௭௨)

அதன்மனுக்களித்ததோகதித்தேவியுமவன்றன்
சுதனெனப்பெருந்துக்கனுமுடன்வரத்தொடர்ந்து
திதமெனத்திகழறனையுஞ்சுகனையுஞ்சிதைத்தே
யெதிர்கடற்கரையூர்தொறுமுறைதியென்றிசைத்தான். (௭௩)

தேறுறுவஞசாரனுக்கினிமையுஞ்சேப்பி
மாறுசெய்கைமிச்சாதிட்டியென்னுமுன்மகளும்
வீறகீர்த்தியாந்தேவியும்விடயசங்கமனுங்
கூறுமைந்தனுமிங்குநம்மருகினிற்குலாவி. (௭௪)

திகழ்சுசீலனைத்தடுத்துநீயுன்மகன்றிறலா
லகமுகன்றனையடக்கியுன்றேவியாமவளாற்
றிகழுபேட்சையைத்தீர்த்துநின்மகள்கொடாத்திகன்ற
னிகல்கெடுத்துலகேழையுமடக்குதியென்றான். (எரு)

வேந்தன்வெங்கலியனையழைத்திழிநருக்கிறகு
மாந்தரில்லினுமலைந்துசூதாடுவார்வயினு
மெய்ந்தகைப்பொருட்பெண்டிர்வாழ்சேரியினிடத்தும்
போந்துவைகுதியென்றுபின்னருமிவைபுகன்றான். (எசு)

நீவிலக்கியாசாரனைமயித்திரிநிலையுன்
றேவியைக்கொடுசெகுத்துநன்மனநிலைச்செருக்கை
மாவிறற்சுதன்சஞ்சலனுமெதிர்மலைந்தே
யாவிசெற்றெனதருகினுமிருத்தியென்றறைந்தான். (எஎ)

மற்றுளோருக்குமவரவர்க்கேற்றனவரிசை
முற்றுமேசெய்துபகையும்வாழ்தானமுமோகன்
சொற்றனன்னவன்சொன்னவைசென்னியிற்சூடிக்
கொற்றவீரர்கழற்றுள்பணிந்தருள்விடைகொண்டார். (எஅ)

இன்னதன்மையர்யாவருந்துறைதொறுமெய்திச்
சொன்னசொன்னசொற்படிபணிபுரிந்திடத்துன்னார்
முன்னர்முன்னர்வந்தடிதொழவாழுநாண்மோக
மன்னர்மன்னவனுரைத்தனன்றேவிக்கோர்மாற்றம். (எகூ)

அன்னமன்னதுன்மதியிதுகேட்டியாலாவி
யுன்னையன்றிவேறெனக்கிலையாதலாலுன்று
வின்னநங்கிளைபல்குநீயென்மொழிக்கிசைந்தா
லென்னருங்கருத்தின்படிக்கிசைவதேயியல்பால். (அ0)

உரையதென்னெனிற்பாஷண்டவிஞ்சையென்றொருத்தி
வரைவுவேண்டுவன்யானெனப்பகர்ந்துசம்மதிகொண்
டருகினின்றதோர்தாமதச்சிரத்தையையாங்கே
விரைவுதூதுவிட்டவளையுமணஞ்செய்தான்வேந்தன். (அக)

மணந்தகாலையிற்பாஷண்டவிஞ்சையைமன்னன்
புணர்ந்துநண்புறமுயங்குநாளவள்வயிற்பொல்லாக்
குணந்தரித்துலகடங்கலுநடுங்குறக்கொடுங்கே
டுணர்ந்ததாதையிற்கொடியனோரஞ்ஞன்வந்துதித்தான். (அஉ)

ஆயமைந்தனுமஞ்ஞன்முப்புரத்தினையழித்த
தீயதென்னவுமருந்தினுற்றீர்வதொன்றில்லா
நோயதென்னவுமுயர்ந்தவர்க்கிடர்செயுநொய்யோர்
நாயவெம்பழியென்னவுநாடொறும்வளர்ந்தான். (அ௩)

அனையனிவ்வணம்வளர்ந்திடுமோகவெவ்வரசன்
மனையுமைந்தருஞசுற்றமுமல்கியவாழ்விற
னனமறந்துலகடங்கலுந்தன்னொருகொடுங்கோல்
வினைசெயும்படியரசுவீற்றிருக்கின்றவேலை. (அ௪)

அவித்தியாபுரச்சருச்சம் முற்றிற்று.
ஆ - விருத்தம் - க அ௪.

## ௪-வது. விவேகன் வனம்புகுசருக்கம்.

காமனுதியர்பெருமபடைகைபரந்தெழுந்து
பூமிமீதுளபுண்ணியத்தலங்களைபபொருந்திச்
சேமமாயுறைவிவேகனைமுதலியோர்திறத்தி
னுமமானதுநிலைகெடபபுடைக்குமந்நாளில். (க)

வேறு.

நல்லறநடுங்கியதுமாதவமொடுங்கியதுஞானநெறியு
மல்லலின்மயங்கியதொழுக்கநிலைகுன்றியதொறட்டவிதமாந
தொல்லையியமாதியெனுமயோகமுமயங்கியது தூயமறையோ
டெல்லையில்புராணமுமடங்கியதடங்கியதிரக்கமதுவே. (உ)

மங்கையர்கள்கற்பழியவாழ்குடிமைகுன்றியதுவாய்மைகுடிபோ
ய்த், தங்கலினெடுமபொறைதகர்ந்ததுபெருஞசமதமங்கள்குலை
யச், சிங்கலுறலுற்றதுபசாந்தியொடுசாந்தியோர்சிரத்தையுடனே
பொங்கியமயித்திரியுபேட்சையருணமாமுதிதைபோயுலையவே(௩)

தம்பமெனநின்றகுலமால்வரையுளோர்கணிலைசாய்ந்ததறிஞோர்
வெம்பமறையோர்கள்புரிவேள்விமுதலாயதும்விலங்கியதுமேற்
பம்பரமெனும்படிசுழன்றததறவோர்திதயடங்கயமுநீ
டும்பருலகுங்குலைகுலைந்தலையமண்முதுகுளுக்கியதுவே. (௪)

இத்தகையதாகியுலகேழினுடனேழுமழிவிட்டதளிர்போன்
மெத்தவெயிலுாடலையுமென்பிலதுபோன்மிகவும்வெம்பிவிடவே
சத்துருவிரோதமட ருங்கொடுமைகண்டுமெய்தளர்ந்துவலிதாழ்ந்
சுத்தமசிரோமணிவிவேகனொருசார்தனியொதுங்கினனரோ. (௫)

நன்றமையன்வாலிகடியத்திறலழிந்துபுவிதன்னிலரணாற்
றன்றிரவிமைந்தனொர்மதங்கநெடுமால்வரையடுத்துறைதல்போ
னன்றறிவின்மோகன்வலியானிலைகுலைந்தனயனண்ணினன்மனங்
கன்றுதலுறுந்தநரநாரணருறும்பதரிகாச்சிரமமே. (௭)

பண்டுதுரியோதனனையாதிகொடியோர்புரிபகைத்திறமையாற்
கண்டுதெரியூர்தவகைமெய்த்தருமபுத்திரர்கரந்துறைதல்போன்
மிண்டுகலியால்வலிதொலைந்துநளராசனவணமேவியதுபோன்
மண்டுபகையாலடல்விவேகன்வழிகுன்றமெய்மறைந்துறைபுநாள்

வேறு.

இயமமுநியமமுமாதனமுமியலும்பராணுயர்மமுநற
றயவுறுபரத்யாகாரமுமதர்தாரணைதயானசமாதியொடே
நியமமொரொண்மரமைச்சாபருநிருபகனும்பெருநீள்பொறையும
வியனுறுசந்தோடனுறுனும்மெய்யனுநல்லறவீரனுமே. (௮)

சாருமடக்கனுநிச்சயனுஞ்சாந்தியுந்தாந்தியுஞ்சமதமமு
மோருமயித்திரிகருணையகத்துள்வரும்திதையுபேட்சையொடும்
டேரும்விராகனிவிர்த்தியுனும்பெண்ணியலார்பலபின்னுமுளோ
ராருமவிவேகனிருந்துறிவந்தடியின்விழுந்திறைந்தனரால். (௯)

தாவுமடற்புலியாரணியந்தன்னிலுறைந்ததனைநீங்கிப
போவதுபெற்றுநலவிதிவலியாறபொன்றுதறபபியபுல்வாய்போற்
பாவிபடைத்தலைவீரரொமைபபங்கமுறச்செய்தபாடுபொறுத்
தாவிபிழைத்தனமையாநின்னருளெமையிட்டுளதாதலினல். (௰)

அஞ்சினமஞ்சினமையாநின்னருளலதில்லையெமக்கொரரண் [ந்
வெஞ்சினமோகன்விடுமபடையான்மெய்தடுமாறிமெலிந்தனம்யா
தஞ்சமகற்றியொளித்துறையுந்தன்மைநினக்கிதுதகவாமே [றே
யெஞ்சலில்வல்லிருண்மல்குதல்கண்டிரவியொதுங்குவதியல்பன்

றாழுமவர்க்கொலிவாரிதியுந்தன்னுளமிழ்த்துமொர்நாவாயாற் [ம்
போழுமவர்க்குநன்மணியுஞ்செம்பொன்னுமளித்தவைபுனைவிக்கு
வாழுமவர்க்குளதுறவெங்குமற்றையவர்க்கிலைமரபினுமீ
ரேழுலகத்தையுமடுகிற்குமெரிசிறிதாயினுமெண்ணுறரால். (௧௨)

பாரியநின்னெடுபுகின்மோகன்பகைநொடியிற்பொடிபண்ணுமோ
நீரியலின்றிநல்விதைபோய்நன்னிலமுறினுமபயிர்நீராமோ [டோ
கூரியபைங்கொடிபலவுங்கொள்கொம்பொழியிற்படர்குணமுண்
வீரியொத்தனையோரேனும்வேந்தனிலாப்படைவெல்லாதே. (௧௩)

பாவமியற்றிநல்லறமோருமபரிசுகெடுத்துயர்பழியோடிம்
மூவுலகத்தையுமரசாளும்முறையிலிதுன்மதிமோகனையு
மாவிசெகுத்திலமென்றாலுள்ளன்பழிசிந்தையனவனன்றே
க்காவினிடைக்குயில்கூவாதேற்காகமதொத்தகணக்காமே. (கச)

மாயைமகன்சரியெல்லோருமக்கணமக்கெனமதியாமற்
றாயையுமுன்னையும்வேறுபடத்தள்ளிவிடுத்துன்றம்முனெனூ
தியவனுக்கணிமுடிசூட்டிச்செல்வமளித்தருள்செயலென்னே
நீயவனுக்கெதுபிழைசெய்தாய்நின்னியலுக்கதுநெறியன்றே (கரு)

என்றிவையன்னவர்சொன்னவெலாமிருசெவியுட்கொடிரு
த்திறைத், துன்றுமலர்க்கையமைத்துமுகந்தோறுமவிழித்தருள்
சூழ்வித்து, வன்றுயர்மாற்றிவிவேகர்பிரான்வருமியமாதியமைச்
சரொடே, யொன்றுனாசெய்வதுகேண்மினெனுவுள்ளநிகழ்ச்சியு
ணர்த்தினனால். (கசு)

வேறு

ஆரமுதங்கொடுத்தவிர்க்குமாருயிரைசசெருக்கவிடமளிக்கு
ம்பாந்தட், சீரனையன்செயலறிநதுநதிறன்மாயைமகன்றனக்குன்
றிருத்தாதைக்குப், பாரநெடுநதுயர்விளைததுபடுத்தசிறைவிடுத
திலையேற்பாவமென்று, பேரறமன்றுரைத்ததொன்றேகுற்றமல்
லாலென்மீதிற்பிழைவேறுண்டோ. (கஎ)

அந்தமொழிக்கவன்கனன்றெனன்னையுடனென்னையும்வேற
கற்றிமற்றோர், மைநதனெனுமாமோகன்றனக்குரிமையத்தையும்
வழங்கிப்பின்னை, யெநதவுலகினுக்குமிறையிவனெனவேமுடிசூ
ட்டியெனைத்தாழ்வித்த, தநதையின்னமென்னமிகைசெய்யினும
யானதுகடத்தறருமமன்றே. (கஅ)

சொற்றருமஞ்சிதைக்குமன்னர்சொன்னபடிசொன்னவரே
தொலையாச்செல்வம், பெற்றவர்களவைதிருத்திப்பேசினர்க்குமுற்
கேடுபிறக்கும்பித்தர்க், குற்றதுணைநூலினுஞ்செவ்வொழுங்கன்
றேலூன்பொசிக்குமுழுவைமுன்போய்க், கற்றறிநல்லறமோதிற்
கடுங்கொலைமாபாவமெனுங்கருத்துறுதே. (கக)

அன்றூலிற்றுயின்மாலு மண்டருமந்தரமலையிட்டலைவதாக்கி,
கின்றூலுந்தன்வருத்தகினையாதபாற்கடலினீர்மைபோலக், கொன்
றூலுமழலெழத்தீக் கொளுத்தினுஞ்சிற்றறிவாளாற்கொய்துகொய்

து, தின்றாலும்பொறுப்பதல்லாற்றீங்குதந்தைதக்கிழையாதென்சிந்தையென்றான். (உ0)

என்றலுமாங்கவையினுள்ளோ ரொவர்கருத்துமவரவர்தமினைக்கண்கூறத், தன்றுணைக்கட்பார்வையினாற்றானுணர்ந்துமுன்னெழுந்துதடக்கைகூப்பி, நின்றுவிவேகனைத்தொழுதுநிறைமதிவாண்முகநோக்கிநீதியாவு, மன்றுணரவியமாதியெண்மருக்குணியமனெனுமமைச்சன்சொல்வான். (உக)

குருவரசன்னைபிதாத்தம்முனெனத்தொழத்தகுமைங்குரவரேனும், பெருமிதங்கொண்டடுமடாதிதுவென்பதுணராமற்பிழைசெய்வாரேற், றருமநெறியுணர்ந்தமிக்கோரவரவர்க்குத்தக்கதக்கதண்டஞ்செய்தன், மருவுதிரைக்கடலுடுத்தவுலகிலத்திற்பண்டைமனுவசனமன்றோ. (உஉ)

அறனழியத்தீங்குசெய்யுந்தானவனைவானவர்கோனன்றுதொட்டு, மறனழியப்போர்தொலைத்துவ்ருவதின்றுமுளதவன்றன்மட்டோபின்னும், , பொறைவடிவுகொண்டதன்மபுத்திரனும்பாரதப்போர்பொருதநாளிற், றிறனழியக்கிளையையெலாஞ்செகுத்ததைந்தாம்வேதமொழிச்செய்கையன்றோ. (உ௩)

மூதாதைதனைச்சிறையிட்டுனக்குமுன்றாய்க்குந்துயரமூட்டிப்பஞ்ச, பூதாதிபலவுயிர்க்குமிட்டிரிழைத்தவஞ்சகர்மேற்போர்செயாம, லாதாரந்தமர்நமக்கென்றன்புசெயிற்பின்புகுணமவர்க்குண்டாமோ, கோதாயவன்பிணிக்கோர்கொடியமருந்தூட்டினல்லாற்குணங்கொடாதே. (உ௪)

காமாதிபடைஞரொனுங்காலிபுகாதறன்வேலிகட்டித்தீய, மாமோகமிகுமோகனெனுங்களையும்வேரோடுவாங்கிநீக்கிக், கோமானின்கருணைவெள்ளநீர்பாய்ச்சியுணர்வெனும்பைங்கூழ்மீதோங்கற்,காமாறுவிளைக்கினல்லாலாராவின்னமுதமெவர்க்கணுகலாமே.

மாதாவின்குறைதவிர்த்துன்மரபிலெம்மனோர்குறையுமாற்றிமற்றை, மூதாதைகெடும்பிணிப்பின்மூட்டறுத்துமீட்டுலகமூன்றுநீயே, யாதாரமெனக்கொடியவவித்தைதகராசனையுமடர்த்துமற்றைத், தீதாயவெவ்விளையுந்தீர்த்தருளென்றிவ்வாறுசெப்பினனால். (உ௬)

வேறு.

தருமத்தின் றளர்ச்சியாலுந் தறுகண்மாமோகன்வெய்ய
கருமத்தின்கொடுமையாலுங்காரியங்கழறுங்கல்விப்
பெருமைத்தனமைச்சராலும்பெறுதமர்பகைஞரோயென்
றொருமித்ததாங்கேயாருமொப்பிலாவிவேகற்குள்ளம். (உஎ)

கருத்துறுநிகழ்ச்சியுன்னுன்கமலவாண்முகத்தின்செவ்வி
யுணாத்திடவுணர்ந்தெல்லோருமுளத்தினன்மகிழ்ச்சியுற்றார்.
வருத்துறுமோகனுன்முன்வருந்துறுசுமதியென்னு
முருத்தவெண்ணமையும்வருதுமுதல்வனைக்கூடினளால். (உஅ)

கோவியல்விவேகவேந்தன்கொடியிடைச்சுமதியென்னுந்
தேவியோடளவளாவிச்சிந்தையிலன்புகூர்ந்து
தாவினல்லறம்பாவிக்குந்தன்மையாலுண்மைநீதி
யாவதுதமமிலெண்ணியன்னவனின்னசெய்தான். (உகூ)

விவேகன்வனம்புகுசருக்கம் முற்றிற்று.

ஆ - விருத்தம் - உகரு.

## ரு-வது - விவேகன் மந்திரச்சருக்கம்.



நித்தியம்பிரிவுறாதநிருபகனபொறைவிராகன்
சத்தியன்றருமசீலன்சமன்றமன்சமாதானன்சீர்ச்
சுத்திதன்பதிதியாயன்சுகனியமாதியெண்ம
ரித்திறத்தவரியாருமிங்ஙனமவருகவென்றான். (க)

எனவிவையுரைத்தலோடுமிருந்தவரொருங்குவேந்தன்
கனைகழற்சரணம்போற்றிக்கைகுவித்தருகினெய்த
வினையுணரனையரோடுமேவேறுருசாரிற்சென்று
நினைவுறுநிகழ்ச்சியொன்றுநிகழ்த்துவானகத்துட்கொண்டான். ()

அன்னவர்முகங்கடோறுமருள்விழிபொழியநோக்கி
யென்னுயிர்க்குயிருநட்புமிகவுறும்படையுமவாழ்வுந்
துன்னுநற்கிளையுமற்றத்தொகுதியுநீரேயல்லாற்
பின்னெனக்குறுதியாகும்பெற்றியார்பிறருமுண்டோ. (ந)

ஆதலானொழியக்கேண்மினனைவருமறமபண்டோதித்
தாதையால்வருத்தமுற்றுத்தளர்பிரகலாதன்போன்று
மீதலான்மோகனுலும்பெட்டெளிமையாகிப்
போதலாற்றமயன்றள்ளப்புறஞ்செல்விடணனும்போன்றேன். ()

புத்தியினெய்துமெய்பொருளாக தண்புனலோட்டத்
தூத்திறமுந்தீபச்சுடரும்போன் றவைதோன்றி
நித்தியமின்றியடிக்கடிமாயுநெறிதப்பா
தொத்திடும்யாவும்புந்தியல்லால்வேறுருவுண்டோ. (௧௪)

ஒளியுறுபுந்தியகத்துளவாயினுமுருவம்போல்
வெளியுறுமங்கதனிற்பொருள்யாவும்வெளிப்பட்டே
தெளிவுறுபற்பலவாசனையாலிவைதோருங்கா
லளவுறுபற்பலவாயதலான்மற்றவையன்றே. (௧௫)

பற்பலவாதனையும்விடையத்தின்பண்புமே
யறபுதமாகியபுந்தியொழுங்கயலேவின்றி
நிற்பதொர்தீபமெனத்தலைநிறுவுதனிகரில்லா
முற்படுசவுகதசித்தாந்தபொருண்முடிவென்றான். (௧௬)

இவவகையன்னோதியசொற்கேட்டெதிர்நின்றோ
ரவ்வவர்யாருமவ்வகைநன்றென்றப்புத்தன்
செவ்வடிபேணச்செல்வுழியங்கேதிகழ்கோலக்
கைவருபீலிக்குண்டனவன்றன்கண்ணுற்றான். (௧௭)

முன்னேவருதப்புத்தனையன்னோன்முகநோக்கி
யென்னேர்வாராயொன்றுவினவற்கெனலோடு
தன்னேரில்லாச்சவுகதன்வெங்கட்சமண்மூடா
வுன்னேர்யானோவெய்துவமென்னேயுரைசெய்தான். (௧௮)

முனிவுற்றிவ்வாறோதியவன்றன்முன்வருதுன்
சினம்விட்டிநகுச்செப்புகநின்சாத்திரநீதி
வினவற்குண்டேனுத்தரமென்னமெய்க்குண்டன்
றனையப்புத்தனவ்வுரையென்னைசாற்றென்றான். (௧௯)

இவ்வாறிவ்வாறிவ்விருவோருமெதிரிட்டே
யொவ்வாவொவ்வாவெஞ்சொலுரைத்தங்குறைபோழ்திற்
பெய்வானத்தூடொள்ளொளிமின்போற்பிறழ்வீரக்
கைவாள்கொண்டோர்தீவிடமன்னோன்கண்ணுற்றான். (௨௦)

செத்தவரென்பணிமாலைபுனைந்துசிரத்தூடே
மத்தமெருக்குவனைந்தெரிபொங்குமயானத்தே
மொய்த்திடுவெண்பொடிபூசிநெடுந்தலைமுடையோடோர்
கைத்தலமேந்திவருந்தகைபற்பலர்கண்டஞ்ச. (௨௧)

குண்டலமேல்வளையென்பிலணிந்துகொடுந்தேற
லுண்டகளிப்பின்மயக்கின்மயங்கியுளஞ்சோரக்
கண்டலமந்துசிவப்பநடப்புறுகாலோடும்
விண்டசொலுந்தடுமாறிடவங்ஙனமேவுற்றான். (உஉ)

அங்கவனவ்வயினெய்துழிநோக்கினனையுற்றே
யிங்கிவன்வெய்யகபாலிகனென்பவனையென்றுத்
தங்களுளத்திலுணர்ந்தெதிர்சென்றயல்சார்ந்தேயவ்
வெங்குணனைச்சமணன்னிதுமுந்திவினவுற்றான். (உ௩)

கரதலமுற்றகபாலவெண்வாய்மொழிகாதுட்கொண்
டுரைசெயவல்லையெனிற்புகலீமமுருப்பெற்றே
வருவதெனப்புனைவேடமுமிங்கிதன்வருபேறார்
தருமமுமுத்தியுமெவ்வகையவ்வகைசாற்றென்றான. (உ௪)

அவ்வுரைசெய்தவனுக்கெதிர்மாற்றமவன்சொல்வா
னிவ்விரதங்காபாலிகமென்பதெனக்கன்பாம
வெவ்வுவயிரவனுயர்தெய்வதமந்தனைமேலோற்கே
செவ்வயினர்ப்பிதமாகவிளையந்நிலைசெய்வேமால். (உ௫)

என்பொடுவெண்டலையோடுதெரித்தழலிடுகாட்டின்
வன்பொடிபூசியநற்குளிருநதுபவாசஞ்செய்
தன்பொடுமாபயிரவமெனுமோமமமைத்தாங்கே
முன்பலியிட்டொடாருநரனைவிலாவூன்முறைவாங்கி. (உ௬)

மாமதுவாலபிசாரமமைத்ததைதவன்றீவா
யோமமுகத்திடையாகுதியீந்துபினுதரந்தீ
யாமதனுக்குமதுப்பெய்துவெண்டலையகலோட்டி
னேமுறவுண்டுகளிப்பதுபாரணமெனலாமால். (உஎ)

இங்கிதுவன்றியுமோர்மனிதன்றனையிகல்வாளா
னங்கடவுட்கெதிர்கண்டமறுத்தொலிநாதிக்கச்
செங்குருதித்தசைகொண்டுயர்பூசனைசெய்கிற்கு
மங்கதுவயிரவமாவிரதத்தியலாமென்றான். (உஅ)

இம்மொழியைக்காபாலியியம்புமுன்னிருகையாற்
றம்மிருகாதைச்சமணனுமப்புத்தன்றானுஞ்
செம்மியடிக்கடிதங்குருநாமஞ்சிந்தித்தே
கைம்மிகுகோரக்கண்டகனுக்கிதுகழறுற்றார். (உ௯)

வேறு.

ஈதொருவிரதமெனறியாவஞெவன்மையாலிப்
பாதகநின்ஞற்செய்யப்பணித்தனனந்தப்பாவி
போதனையுட்கொண்டென்னைபுரிந்தனை கொடுமையென்ஞு
வோதினன்சமணன்புத்தனன்னவையொக்குமென்ருன். (௩0)

என்றலுங்கரகபாலனெரிவிழித்தெம்பிரானைக்
குனறவில்லியைச்செஞ்சோதிக்கொழுந்தைமுச்சுடர்க்கண்ணுனை
நன்றறிவிக்குமெங்கோன்ஞானதேசிகனைப்பொல்லா
வன்றிறற்பாவியென்றல்வழக்கன்றென்றினையசொன்ஞன். (௩௧)

நங்குருநாதனின்பாயக்குமவ்விரதஞ்செய்யு
மிஙகெனக்கியன்றிடாதெவ்வுலகத்துமுண்டோ
சங்கரனுடுமத்தேவர்தமையுமீண்டழைப்பன்வானிற்
றிங்கள்செங்கதிர்மீன்செல்லுஞ்செலவையுநதடைசெய்வேனுல்.()

நீரினுலகம்யாவுநிரப்புவனன்னநீரை
யோரிறைப்பொழுதிலுண்பனுலகெலாஞ்சென்றுமீள்வன்
பாரைவிண்ணுக்கிவிண்ணைப்பாராக்குவிப்பனல்லாற்
பேரதிசயம்பல்கோடிபின்னரும்புரிவனென்ருன். (௩௩)

சாற்றுமங்கவன்சொற்கேட்டசமணன்மற்றெவனெநின்பான்
மாற்றருமாயைசெய்துவஞ்சித்திவ்விநதிரசால
தோற்றுவித்தனனென்றின்னசொற்றனன்சொற்றலோடுஞ்
சீற்றமுற்றழன்றுகண்கள்சிவப்புறவவனைநோக்கி. (௩௪)

ஈறிலாவெமபிரான்கொலிந்திரசாலஞ்செய்வான்
மாறிலாச்சிவசூரோகிமலபங்கதாமற்றின்ன
கூறும்வாய்குருதிசோரக்கொய்தியான்பயிரவிக்கே
பாறுசூழ்மயானத்துன்னைப்பலிகொடுத்திடுவனென்றே (௩௫)

கைத்துடிமுழங்கப்பூதகணஙகள்கொக்கரிக்கமேகக்
கொத்திடியிடித்ததேபோற்குமுறிவாளுருவியாங்கே
தத்தடிபெயர்த்துவாதுசார்நதனன்சமணனஞ்சிப்
புத்தனைநடுக்கத்தோடும்பொருக்கெனத்தழுவிக்கொண்டான். ()

அன்னவன்றன்னைப்புல்லியயிஞ்சையேபரமதன்ம
மென்னுமச்சமணன்றன்னையெதிருறுகபாலியீசன்
றன்னைநிந்தித்தநின்னைச்சடுதியிற்புகுநதிவ்வாளாற்
சின்னபின்னங்களாகச்சிதைபபதேதருமமென்ருன். (௩எ)

அனையசொற்கேட்டபுத்தனையநின்விரதநீதி
வினவுமித்தவத்தோன்யாதுவிளம்பினுமுளம்பொறாமற்
சினமிகுந்தனையனாவிதீர்ப்பதுதருமங்கொல்லோ
வெனவிவையுரைத்தலொடுமெடுத்தவாளுறையிலிட்டான். (௩௮)

வாளுறைபுகுத்தலோடுமருட்கபாலிகன்றன்சீடர்
மூளுநின்கோபந்தாழ்த்துமுத்திநம்மதத்துக்கெய்தல்
கேளெனவுரைத்தல்வேண்டுமெமக்கென்றாரனையர்கேட்பக்
காளவெவ்விடமேயன்னகாபாலியினையசொன்னான். (௩௯)

அக்கணிபுனைநறுவெண்ணீறணிந்தெருக்கலருஞ்சூடிக்
கைக்கபாலருமாய்வேடங்காளர்தமைப்போற்பெற்று
மெய்க்கவுரியைப்போலங்கோர்மின்னனாரின்பந்துய்க்கத்
தக்கதேமுத்தியீதுசங்கரன்மொழிந்ததென்றான். (௪௦)

விண்டசொற்கேட்டவன்னார்விரத்தராயினவர்க்கலாற்
கெண்டையங்கண்ணாரோடுகொழீஇயின்புறப்பெற்றோருக்
குண்டெனின்முத்தியாரோவுண்மையாய்க்கொள்வரிந்த
மண்டலத்தேதாரிலென்னாவன்கபாலிகன்முனசொன்னார். (௪௧)

உரைத்தவர்வாய்மைகேளாவுண்மையிங்கின்னநம்பால்
வரத்திலையிவர்க்கென்றுன்னிமன்னுகைக்கபாலனங்கே
சிரத்தையைவருகவென்றானெனலுந்தன்றிருத்தாயைக்கொல்
கரைத்ததென்றெண்ணிச்சாந்திகருணையோடலக்கணுற்றாள். (௪௨)

வேறு.

மாண்டமாந்தரென்பினோடுவார்புனைந்தகொங்கையு
நீண்டசேயரித்தடங்கணீலமுங்கபாலமும்
பூண்டசூலமுஞ்சிலைப்புரூரமுங்குரூரமாய்த்
தீண்டுறாவிராசதச்சிரத்தையெய்தினாளரோ. (௪௩)

அச்சிரத்தையெய்தலுமடுத்தசாந்திகருணையா
மொய்ச்சிருக்கும்வண்டினங்கண்மூசுமோதிமாதரா
ரிச்சிரத்தைராசதனியற்சிரத்தையாகுநம்
மெய்ச்சிரத்தையல்லவென்றுவீங்குதுன்பநீங்கினார். (௪௪)

அத்தகைச்சிரத்தைவந்தவன்கழற்றொழாமுனம்
பொய்த்தசீடரைப்புணர்ந்துகோடியென்றபோழ்தின்வாய்க்
கைத்தலத்தவஞ்சிமெய்கலந்தணைக்கவேயன்னார்
சித்தநெக்குடம்பயர்ந்தொர்மாற்றமின்னசெப்பினார். (௪௫)

வேசைமாதரினுமனேகவிதவைமாதரினும்விலைத்
தாசிமாதரினுமனேகர்யாங்கண்முன்றழீஇயபோ
தேசுலாவுமனையர்கொங்கைசேரினுஞ்சிரத்தைநீ
யேசுறுதணக்தல்போலுமின்பமெங்குமில்லையால். (சகூ)

என்றுபின்னருங்கபாலிநன்பதத்திறைஞ்சியே
நன்றுநம்மதத்திலின்பநன்றெனுநயந்துவீண்
புன்மொழிற்செய்கின்றதின்றுபோக்குகின்றனம்மெனு
நின்றுமற்றவர்க்கிவ்வாய்மைபின்னருநிகழ்த்தினார். (சஎ)

திருவருட்செய்தெங்கடமைதீர்க்கவேண்டுமின்னமென்
றுருகியுட்களிந்துபோற்றியோதினரவ்வாய்மைகேட்
டருள்புரிந்துமந்திரித்தொரங்கையோட்டையேந்திவான்
மருவுமாமதுப்பெய்வித்துவாயில்வைத்தருந்தியே. (சஅ)

பருகுதேறன்மிச்சிலைக்கபாலமோடுபார்த்திரீ
தொருவருக்குமெய்துறாததும்பருக்குமாழிவாய்
வருவதன்றுபாசபந்தமரணமூப்புமாறநும்
மிருவருக்குமன்புவைத்தியாமளித்ததெனவுமே. (சகூ)

திண்கபாலமதுவினைச்சிரத்தைமுந்திவாங்கியே
பண்கள்போலுமின்சொலோதுபவளவாய்மடுத்தியா
னுண்களீதைநுகர்திரொன்றளிக்கவாங்கியுற்றதங்
கண்களோடுளங்களிக்கமாந்தியின்னகழறினார். (ருO)

பண்டனேகவேசைமாதர்பருகுதேறன்மிச்சில்யா
முண்டதாயினுஞ்சிரத்தையுதவுமிந்தமதுவெனக்
கண்டதோவதன்றுவாரிகடையவந்தவமுதைவா
னண்டர்தாமுமுண்டபோதிலாலகாலமென்பரால். (ருக)

எதிருமிச்சிரத்தையின்சொலிரதமெய்தியோகொல்செவ்
வதரமுற்றவாசியேகொலதனியற்கையேகொன்மா
மதுரமுற்றிமமதுவின்வாசமவகுளவாசம்வீசியே
பதரியுற்றகனியையும்பழித்ததென்றுபன்னியே. (ருஉ)

பருகுகின்றநறவின்மேனிபரபரத்துளங்களித்
துருகியின்பநலமிகுத்துரோமமுஞ்சிலிர்க்கவே
யிருகரங்கள்கொட்டிமற்றிதென்னவற்புதம்மெனு
வருகிருந்தபேர்நகைக்கவங்கொராடலாடினார். (ருங)

விழிசிவந்துவாய்வெளுத்துநாவிண்டசொல்லுமங்ஙனே
தழுதழுத்தயர்த்துமேனிதலைசுழன்றுகிறுகிறுத்
தழலெழும்புன்னகைநகைத்தகங்களித்துமுகமவெயர்த்
தெழுவர்தட்டிவிழுவர்கெட்டவியல்பர்கட்டமிடுவரால். (ருச)

தியங்குதம்முனிவனைவதொன்றுசொல்வதொன்றுசெய்வதொன்
றியங்குகின்றநெறியராகியாவருநகைக்கவே
மயங்குகின்றவிருவருமதத்துமெய்ம்மறந்துவீழ்
கயங்கள்போலமண்ணின்வீழ்ந்துகண்ணுறக்கமெய்தினார். (ருரு)

கண்டுநின்றவனையர்தன்மைகண்டவெங்கபாலிநந்
தொண்டரிங்குடம்பயாந்துசோருமலீலைபாரொணாத்
திணப்பறப்பிரந்தபோதுசெய்யும்வேலைவெறிதெளிந்
தெண்டுளங்கவிருவருமெழுந்துவந்திறைஞ்சியே. (ருசா)

ஐயவிம்மதத்தினைப்பழமருக்குமில்லையெனச்
செய்யவாய்மலர்ந்துநின்றுசித்தியாயதெங்ஙனம்பான்
மையல்கூரமதுராமுறுமதுநினைக்குமுன்னமின்
கையதாடுவைத்தெனன்கலவியென்றுகூறினார். (ருஎ)

அத்திறங்கொணறவழைப்பதருமையேகொலட்டமா
சித்தியும்பலிக்குநற்றிறத்திலும்பர்மாதரோ
டெத்திறங்கொண்மாதருமிமைப்பிலுன்னிலெய்துவார்
முத்திறங்கொளுலகினம்முயற்சியாவுமுற்றுமால். (ருஅ)

எனாறுசிடருக்கவனிசைத்தக்கேட்டசமணர்கோ
வன்றிறற்கொண்மோகமன்னன்வாய்மைமேலியாமெலாஞ்
சென்றடுத்தகருமமின்றுதீரநற்சிரத்தைநேம
லுனதெழிற்செய்தவனையிங்குறச்செயென்றியோதினான். (ருகூ)

அன்னவாய்மையவன்விளம்பவக்கபாலியவனைநின்
முன்னதாகவிட்டுநம்முயற்சியுமுடிப்பனா
வின்னதானமனையள்புக்கிருந்ததானமென்றுதேர்ந்
துன்னதானகணிதநூலினோதிலென்னவுரைசெய்தான். (சா0)

இலகுகுண்டணிக்கணத்தியற்சிரத்தைவைகிட
மலகில்சோதிடத்திலெண்ணியாய்ந்துரைப்பன்யானெனாப்
பலவராடிகைத்திரட்பரப்பிநின்றவேலைவாய்
நிலவுமானனத்தனையங்ஙனேடிவந்துகூடினான். (சாக)

அந்தமானனெய்தலோடுமனையகுண்டனிங்குநீ
வந்தவாறுபுகலெனுமுன்மன்னன்மோகனுணையாற்
றந்ததூதன்வினைபுரிந்ததருமனைக்கவர்ந்துதாட்
பந்தமானதனையிடப்பணிந்தலெந்துபன்னினுன். (சுஉ)

ஆதலிற்கடற்புறத்துமப்புறத்துமறிஞர்சூழ்
மாதலத்துமெய்தியான்வளைத்தபோதுமங்கவன்
போதலுற்றிருந்ததெப்புறத்திலென்றுணர்ந்திலேன்
சோதிடத்துணர்த்தல்வேண்டுநீயிதென்றுதுதிசெய்தான். (சுங)

கருமமிங்கிதெனவுமன்னகணிதனன்றுநன்றியிற்
றருமனும்புகுந்துவைகுதானமுஞ்சொல்வேனெனு
மருவுகோளிராசிநாள்வராடிகைக்குளெண்ணியவ்
விருவருங்காந்திருக்குமிடமிதென்றுநாடினுன். (சுச)

அக்கபாலிவதனநோக்கியனையவன்சிரத்தைபோய்ப்
புக்கவாறுகேட்டிமால்புராரிபத்திகாப்பிறுற
றக்கயோகர்தம்முளத்தலத்தளென்றுபின்னருந
தொக்கமானனுடுகின்றவறனியற்கைசொல்லுவான். (சுரு)

தன்னுடன்பிறந்துவந்ததங்கைநங்கையுற்றதா
முன்னிடம்பன்மகனுரைத்தமொழிவினுவியன்னவன்
பொ னுடம்புள்ளமும்புழுங்கியயழுங்கியம்
மின்னுடங்குமிடையினுளைவினாவினாடுதருவியே. (சுசு)

புண்ணியத்தலங்கடெய்வநதிகண்மிக்கபுனிதர்சூழ்
திண்ணியற்கிரித்தடங்கள்செழுவனங்கண்மறவலா
ரெண்ணியற்றுபதிகண்மற்றுமினையவாயவிடமெலா
நண்ணியச்சிரத்தைதன்னைநாடியயங்கமவாடினுன். (சுஎ)

பின்னருஞ்செல்கின்றபோதுபெரியயோகர்தம்முளந்
தன்னினங்கிருந்தவஞ்சிதன்னைவநதுகண்ணுறுந்
துன்னுசஞ்சலந்தவிர்ந்துசொன்னதங்கைதன்னொடு
முன்னிவைகினுன்விளைந்தவாறிதென்றுகூறினுன். (சுஅ)

வேறு.

தீமனச்சமணனிம்மாற்றஞ்செப்பலுந்
தூமதிச்சாந்தியுங்கருணைத்தோகையு
மேமநன்னிதியமுன்னிழந்ததெய்தினு
ராமெனத்தம்முளத்தையநீங்கினுர். (சுகூ)

காதுறக்கேட்டவைகருதிச்சாந்தியா
மாதுமக்கருணையுமவலியசோதிடத்
தோதுநன்மையுமிவனுணர்ந்தென்றுன்னியே
போதுவமனையள்பாலென்றுபோயினார். (எ0)

அங்கதுநிற்கநல்லறனைநாடிமுன்
றங்கியமானனைச்சமணர்மாமியற்
பங்கனைப்புத்தனைப்பார்த்துக்கையுறும்
வெங்கபாலியுமிவைவிளம்பன்மையினான். (எக)

யோகியருளத்தரிபத்தியோகினி
யாகியமடக்கொடியருளினகாவலிற்
சேகிலாத்தருமனுஞ்சிரத்தையோடுநீ
லேகியாங்கவண்மற்றெவர்பற்றுவார். (எஉ)

ஆயினும்வயிரவியாமெனன்னையா
மாயினையுன்னியும்மந்திரத்தினாற்
றாயயோகியர்மனத்துன்னினார்கண்மேற்
போயிவண்கொணர்ந்திடப்புணர்த்தல்செய்வனால். (எ௩)

எனவுரைக்கொருப்படையிருந்துசிந்தைபு
ணினைவுழிக்கபாலமுநெடியசூலமு
மனலுமிழ்கண்கருமட்டகாசமும
வனையுமவ்வள்ளென்புமாய்வந்துதோன்றினாள். (எ௪)

வந்தவடனக்குளமகிழ்பூசனை
தந்தடிவணங்கிமாதவஞ்செயோகியர்
சிந்தையுளறனையுஞ்சிரத்தைதன்னையு
முந்தியென்வயிற்கொணர்ந்துதவுவாயென்றான். (எ௫)

சமணருதியாசருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-எ௫.

---

## க௯ - வது, வயிரவிவதைச்சருக்கம்.

வேறு.

என்றுமொழிந்தவுரைகொண்டுதாளிலிடுசெஞ்சிலம்பொலியெழத்
துன்றுநெடுங்கநிமிர்செங்கையூடுதுடியுங்கறங்கவிடிபோன்
மன்றுவெழுந்துவருகோபவேகம்வடவாமுகத்தழலொடே
முன்றுளெழுந்தவிடமுந்திரண்டுவருகின்றதென்னமுடுகா. (க)

அயிறங்குசெங்கைவளைபொங்கவெங்கணனல்சிந்தவந்துகடைவா
யெயிறங்கிரண்டுபிறைபோல்விளங்கவிருளங்கமெங்குமிலகப்
புயநங்குகுன்றும்வனமுந்தகர்ந்துபொடிமண்டமண்டும்விசைகண்
டுயிர்தங்குகின்றவுடலங்கண்மங்கவுலகங்களெங்குமுழைய. (௨)

சூலங்கபாலம்வடிவாள்வில்லமழுகொடுபாசநீடுகதைவெவ் [க்
வேலங்குசம்பல்பலகைத்தலங்கண்மிசைகொண்டுசெருச்சடைமுடி
கோலந்துலங்கவறமொன்றிலாதுசொல்லுங்கொலைத்தொழிலினுங்
காலன்கணங்களொடுமஞ்சவிஞ்சுகதிருந்துமுன்றுதிரிய. (௩)

வெண்டாமவெண்புபுனைமாதிவ்வாறுவிகாவிற்புகுந்தெவரும்
வந், தன்டாதயோகமுயல்வாருளத்திலரிபத்தியன்புதொடரக், கண்
டாள்சிரத்தையறமேரெருத்தசிவலாக்கவர்ந்திடுவதற், குண்டா
மொர்விஞ்சையென்னவுன்னியேதன்னுருமாறியுற்றிதுசெய்தாள். ()

காயத்தினூற்றவுயிரைப்புகுந்துகவர்கின்றகாலனெனமா
மாயத்தியோகமுயல்வாருளத்தில்வளர்சுத்தசைதந்யங்களைத்
தாயற்றிருந்தசிறுபார்ப்பினங்கடமைவெம்பருந்துகொடுவின்
போயுற்றதென்னவெதிர்பற்றியங்கொர்நொடியிற்புறப்படுவமே.

அனியாயவருசிவராச்சிரத்தையறனேடிகைப்புகுமநாட்
டனியாயிருந்ததிறல்யோகர்சித்தைகருவேடர்பற்றுமிருபுன்
மனையாயிருந்தவொருசேக்கையாயமர்ந்தவப்புமண்டவினவின்
கனியாயுமந்துகாத்துண்டபோயகதிர்நெல்லுமாயினதரோ. (௪)

ஆகாதவன்கணிமாயநேயபதனைக்கவர்ந்தொருபுறச்
சேகாதிருக்கியொருபாலெவன்றனினைவஞ்சியாததுவுரு
மாகால்விசைத்தநெடுவானநக்திவ்மதியோடுவெமபருதியைக் [யே
*காகோதரங்கொண்டெழுகின்றதென்னவகல்கின்றகாலையிடை

பேர்வாள்கரத்தினுழையுற்றபேதையிவைமற்றிதென்னவினையெ
ன்றோர்வாளழுங்கியுலைவாளயற்றனுடன்வந்தவற்கயருவாள் [ன்
போர்வாள்கடிந்தவிழியின்கண்மாரிபொழிவாள்கருத்துமழிவாள்
சோர்வாடுவெண்டுவிழுவாள்கறங்குசுழல்கின்றதென்னவுழல்வாள்.

மெய்யோவெதும்பமதியோமலங்கவெயர்வோமுகத்தினுறமா
மையோதிசோரமலரோகசங்கவளையோதகர்ந்துசிதறக்
கையோநடுங்கவிடைபோலவங்கமுழுதுங்கனிந்ததுயர்கண்
டையோவிவட்கிதுறுமோவெனப்பல்பலபேரரங்கதையுறவே. (௬)

---

* காகோதரம்=பாம்பு.

பொன்றங்குமேனிதளர்வுற்றிவ்வாறுபுலிவாயின்மானெனவறன்
றன்றங்கையுற்றதுயர்கண்டுவெஞ்சிதளரேலெனப்பகர்வுறுக்
குன்றங்கள்கொண்டமமணியாடுகின்றபொடியாடடக்கைவழூவச்
சென்றங்குதைந்துபுறநின்றநீலிசெலவைத்தகைநதழர்செய்தே. ()

என்றும்ச கலைகயரிநாமவாளிவிவள்வின்மையீடுபடவே
வென்றுல காலமெனவாநவந்தவெகுநபிநெருசுக்கலையக்
குன்றியமொனங்மடெரநாசிபொய்வமென னுமுட்குறிபபினுடனே
நின்றனவிவ்விலையிட நுறறபேபதைநிலையாவர்சொல்லுமவரோ. ()

வேறு.

நாரார்வி மமனவள்கைதவமு
நேரயொருவ றணிநின்றமைபுரு
சேராவரிபர்கியருட்டுணைபின
வாரமைமுமு னிமயங்கினளால். (கஉ)

மறியெ ரமெைமைவநதுவளர் தவரோ
முறியோர்ரு ழவெமுகறயோனெனுமாற்
சநியொபினியும்புரியநதகுமோ
விநியொவிநுவென்னெனவெய்துறுமால். (கங)

மாவாரணமன்றொருவன்மடிவிற்
காவாயெ றுமுசைஷயிர்காத்தமைதான்
பாவா பரிப ியெனுங்குயிலே
நீவாரமெய்யனனிபுகழ்ந்திடுமோ. (கச)

துன்மானிடனொரார்துளைபமைதயாம
பொன்மானகனுடுபொற்கலையு
நிணமாண்பிணினீபெறுவித்ததலாற்
சனமானமதார்தருவித்தவரோ. (கரு)

கருவுற்றெழபாலகன்மேற்கனகன்
செருவுற்றெழநாணரசிங்கமெனு
சுருவத்தொடுதூணின்முராரியையும
வருவித்ததுநின்னருள்வந்தலவோ. (கசு)

கைக்கோகனகங்குவியத்தமுடம்
பக்கோடுருகக்கணருமபியநீர்
புக்கோடநிலத்திவைநீபுரிவித்
தெக்கோதிலர்புந்தியிலெய்திணையோ. (கஎ)

பைதாழரவன்னவள்பற்றியெமைக்
கைதானெகிழாதுகடுந்துயரஞ்
செய்தாலுநின்னன்புதெரித்திடவந்
தெய்தாதிதுவென்னபராமுகமே. (கஅ)

என்றுவிவைபன்னியிரங்கியிடு
மின்றுளெதிர்வீறர்பத்தியெனு
மன்றுரியருட்சிறிதேபுரிதற்
குன்றுமுனெழுந்தொரொள்ளொளியே. (கக)

ஒருபானிலவுமொருபால்வெயிலு
மிருபார்வையினூடுமெழுந்தறனுந்
தருபான்மொழியுந்தடைவிட்டகலப்
பொருபாவியுடற்பொடிசெய்ததுவே. (உ0)

அன்றயிறெழக்தெறுமாரிருள்போல்
வன்றகமெனத்திகழ்வைரவிதன்
*சன்றகமுகெட்டிடவூநதருமன்
முன்றகவிழுந்தீமுடிந்தனவே. (உக)

பொல்லாதவர்நன்மைபொருந்தவரு
நல்லார்மிகவன்றுயர்நண்ணுவதுந
தொல்லார்வினையால்வருனுநதொடர்பாய்
நில்லாதெனும்வாய்மொழிநிச்சயமே. (உஉ)

தெறுதற்கரியாளொடுதீமைசிதைத்
துறுதற்குறியொண்டிறன்மோகனெனும
வறிதூற்றவன்வாழ்வெனுமாயமுமே
விறுதற்குமொரோதுவதாயதுவே. (உங)

அப்போதுசிரத்தையுநல்லறனும்
கைப்போதுறும்வன்றுயர்கண்டவிரா
விப்போதுவிடிந்ததெமக்கெனவே
யொப்போதருமுள்ளமுவந்தனரால். (உச)

வனவோதிமம்வந்தறனைத்தழுவி
நினைவோடுறும்வன்றுயர்நித்திரையிற்
கனவோவெனவந்துகழிந்தமைதா
னனவோவலவோவெனநாடுவரால். (உரு)

* சன்றகம்=போர்க்கவசம்.

கரிபற்றியழிந்தகராமெனவே
முரிபற்றிரனும்முகமுஞ்சினமு
மெரிபற்றியவஞ்சகியிற்றதுநம
மரிபந்திபினுமெனவுன்னுவரால். (உசு)

தாயாமவடன்னருள்பெற்றநமக்
கோயாதொருவல்வினையுற்றிடினுட
வீயாதவிளக்கெதிர்விட்டிடெனத்
தீயாதுறுமோவெனல்செப்புவரால். (உஎ)

நாநாவிதமிவ்வகையெண்ணிநவின்
றானார்வடிவாளனுமொண்டொடியு
மேனுடியயோகினிபால்விரைவுற்
றூனுடியகன்றெனவண்மினரால். (உஅ)

வயிரவிவதைச்சருக்கம் முற்று.
ஆ. திருவிருத்தம் - அகக.

---

## உo - வது, சிரத்தைமீட்சிச்சருக்கம்.

பரிந்தரிபத்திசெய்யபாதபங்கயங்கள்போற்றித்
திருந்தியவுணர்வின்மிக்கதருமனுஞ்சிரத்தைதானும்
வருந்துமெம்மிடுக்கண்டீரவஞ்சிநின்கருணைபபார்வை
புரிந்தனையாரேநின்னைப்போலிடர்தவிர்ப்பரொன்றார். (க)

ஏதவருரைத்தல்கேளாவினியயோகினிகள்யாமே
மேதகுவிவேகனார்க்கும்வியன்மணமபொருத்திமோக
ஞதியர்தமையுமவேரோடகற்றியந்நிவிர்த்தியென்ற
காதலன்றனக்குபபின்னுங்கதிர்முடிபுனைவிப்பேமால். (உ)

என்றியற்சிரந்தைதன்னையிரங்கினணோக்கியஞ்சன்
மன்றலங்குழலியீண்டுவெருந்தியவருத்தந்தன்னுற்
சென்றநின்கருமந்தாழ்க்கச்சிந்தியேலதற்குமயானே
பின்றுணையாவனென்றுபின்னருமினையசொன்னாள். (ங)

இனியமாக்கணமுந்தாழாதிவ்வயினின்றுமேகிப்
புனிதநாமகட்குன்கோமான்புகன்றமைபுகன்றுமற்றவ்
வனிதைதன்னியையுமீண்டம்மன்னனுக்குரைத்துவேதன்
றனியருட்புதல்விருட்டுந்தாமம்வேய்ந்திடச்சொல்லென்றே. (ச)

இத்திறத்துறுதிவாய்மையாவையும்புகன்றுமுன்னர்த்
தத்துறலகற்றிச்சேறிதையணியென்னுவீரக்
கைத்திறலறனைமற்றுங்காவலிற்போதியென்றுண்
மெய்த்திறத்தனையர்தாழ்ந்துமெல்லியல்விடையுங்கொண்டார். ()

இருவரும்விடைகொண்டபோலேகுறிச்சார்ந்திவர்ந்து
மருவுதன்றுணைமுந்திமறலிபாற்போனசீவன்
பொருவருமுடலிற்மீட்டும்புகுந்தெனப்புல்லிக்கொண்டாள்
கருணையுந்தனதுதெய்வக்கணவனைத்தழுவினாளால். (௬)

மாமணைச்சார்ந்தபின்னர்மார்புறப்புல்லிமீட்டுந்
தூமணிக்கருணைகேள்வன்றுணைவியைத்தழுவியாரு
மேமுறவின்பமெய்திப்பிருப்புழிப்பியன்றதெல்லா
நாமவேற்றருமன்றேவிநவின்றனள்சிரத்தைக்கம்மா. (௭)

கேட்டனளுற்றதெல்லாங்கிளர்ந்தெழுமுயிர்ப்பினோடு
மீட்டுநற்சிரத்தைதாயின்றமெல்லியறன்னைப்புல்லிச்
சூட்டலருச்சிமோந்துதுணைக்கணீர்க்கலசமாட்டி
வாட்டமுங்களிப்புமொன்றாய்மயங்குறவைகிப்பின்னும். (௮)

மன்னவனைவறன்றொல்வைகுமத்தலத்திலெய்தத்
தன்னவன்றேவியோடுந்தமயனைச்செல்வதாக்கிப்
பின்னவளீன்றபேதைப்பெண்பெறுமவாணிதன்பால்
முன்னவன்பணித்ததூஉமொழிந்திடக்கடிதிற்சென்றாள். (௯)

கண்டனள்கலைமான்றன்னைக்கைகுவித்திறைஞ்சியோங்க
ளொண்டிறல்விவேகவேந்தற்குமநுப்பிடைதயென்னும்
பெண்டனைத்தருதல்வேண்டுமென்றனள்பேசக்கேட்ட
முண்டகமலரோன்றேவிமுறுவலித்தினையசொன்னாள். (௧௦)

வேறு.

ஓசுமதியெனுமனைவியன்னவிவேகனுக்கிருந்துமொல்காதிம
கே, பேசுமதிசமமதியோபெண்டிருந்தும்பெண்கொடுக்கப்பெறு
வாருண்டோ, கூசுமதியாங்கள்செயயுங்கொள்கையோவல்லதுபெ
ண்கொடுத்தோமேனு, மேசுமதிவிகடமெய்தாதிருவருமாங்கிவைய
வர்கொல்லோவென்றுசொன்னாள். (௧௧)

அனையமொழிகேட்டலுமேசிரத்தைபின்னுமியற்சுமதியணங்
குதன்பாற், றனையவொய்தாமையினாலுந்தன்கணவன்பகைவலியாற்
றாழ்தலானும், வினையவதியெனக்காலமூன்றுமுணர்திறத்தாலும்

விறல்விவேகற, கிளையமணம்புரிவதற்கவ்வேந்தினைழயுமியைந்தன ளாலென்றுபின்னும. (கஉ)

தன்பாகமுமைக்களித்தசங்கரன்கங்கையைத்தனதுதலைமேற் கொண்டு, மன்பாகிபிருந்திலரோதிருமாதைதமணிமார்பிலமைத்த மாயன், பின்பார்மங்கையைப்புணர்ந்தும்பேதமவர்க்குளதோவெ மபெருமானுக்குன், மென்பாவைசுமதியினுமேமயிடினுமுயிர்க்கு யிராய்விளைழவான்மேற. (க௩)

அன்னமொழியுண்மையெனவறைந்தமொழியினபுறக்கேட்டல ர்மேல்வாணி, நன்னசுமமகிழ்ந்துமுகத்தாமரையுமிகமலர்ந்துதன துகேள்வற, கினனதிறமயாவுமுணாத்திலங்கிழைதன்மகட்குமி வையெல்லாமோதிப், பின்னரவரிவையுபெற்றுபபெயர்த்துமிவை சிரத்தையொடுபேசினாளால். (கச)

ஆர்பெறறநன்மக ரமென்மகளுக்கிணையலவென்னரிவைக்கேற்குஞ் சீர்பெற்றகொழுநனுமச்செம்மலல்லாலில்லையிதுசெய்துமென்றுத் தார்பெற்றகுழ லாடகுத்தக்கமொழிபகர்ந்தினிநீதாழாதேகிக் கூர்பெறறநல்லறிஞர்போமானையிங்குவரக்கொணர்தியென்றாள். ()

வேறு.

அன்னசொறசிரமேற்கொண்டவணங்கனுள்புதல்வியோடுந் தன்னகமகிழ்ச்சிசெய்யதாமரைமுகம்திறமேறுன்ற மன்னவனறன்பான்மீண்டுவருநெறியூடுகண்டோர் முன்னர்வந்திணைய்வாய்மைமுறைமுறைமொழிவதானார். (கரு)

வந்தனைகொல்லோவெனாறுமகிழ்ந்தெதிர்தழுவிக்கொளவா ரிந்தநின்வரவுகாட்டுமித்தினைநுசுதினமென்பார் பந்தனமுன்னையன்னபாதகர்புரிந்தாரொன்று நொந்தனஙகேடடுபபட்டநோயின்றுதவிர்ந்ததோமென்பார். (கசா)

புகலமுன்கேட்டவார்த்தைபொய்மமொழியாகுமென்பார் திகழுமிவ்வஞசியாஙகுச்சிறைபபட்டுமீணடதுண்டேற் பகலினுமவிருஞசோதிபபனிமதியுதயமபோல முகமொளிதவழுமேகொன்மொய்குழலிவளுக்கென்பார். (கஅ)

எவ்விடத்தெதிர்ந்துகண்டாளிவளையச்சாந்தியென்பா ரவ்விளங்கொடிநோய்தீர்ந்தததுவேயிஙகமையுமென்பார் செவ்வியதன்னையீன்றசிரத்தையைக்கண்டபின்பு நவ்வியன்னவட்குப்பாரீர்நகைமுகமலர்ந்ததென்பார். (கக௯)

இவள்சிறைமீட்டுவந்தாரியாவரோபோயங்கென்பா
ரவளுடன்பிறந்தமுன்னோனறவீரனுருமென்பார்
பவவினைகடியும்பார்வைப்பத்தியோகினிகொலென்பார்
தவமுயன்றுடையயோகர்தங்களாலியன்றதென்பார். (உ0)

உணர்வுடைவிவேகவேந்தனுபநிடமாதைச்சேர்ந்து
மணவினைபுரிதற்குண்டோமற்றினியையமென்பார்
புணர்முலைவர்வுதானேபுகன்றதான்மலர்மேல்வாணி
கொணர்தியீங்கவனையென்னுங்கொள்கையுங்குறியுமென்பார். ()

அவரவர்க்கியன்றவார்த்தையனைவருமிவ்வாறோதி
யுவமையின்மகிழ்ச்சிகூருமளவையிலுண்கணீலப்
பவளவாய்ச்சுமதிநாதன்பக்கலிற்சிரத்தையென்னுஞ்
சுவைகனிந்தனையதீஞ்சொற்றோகைவந்திறைஞ்சினாளால். (உஉ)

நின்றவடன்னைநோக்கிநீயிவணகன்றுபோன
வன்றுதொட்டின்றுகாறுமங்கனநிகழ்ந்ததெல்லா
மொன்றுமிங்கொழிவுறாமலுரைத்தியென்றிறைவிருவ
மென்றளிரியற்பைங்கோதையாவையுமவிரித்துச்சொன்னாள். ()

ஆதியோடந்தமங்கனடுத்தவையாவுமன்னா
ளோதியவாய்மைகேளாவுவகையாலுளம்பூரித்து
நீதுயரிவ்வாறந்தோநெடிதுழந்தனைகொலென்னாத்
தூதியோடொத்துப்பின்னுமினையனசொல்வதானான். (உ௪)

அரிசிவபத்தியாகுமரிவையாருளேநம்பாற்
புரிதிருப்பார்வையுண்டுபுண்ணியமனையநீயுண்
டுரியநல்லறனுமுண்டாலுளத்துறுசுமதியோடுந்
தெரிவுறவியற்றுமிங்கென்செய்கையுமுற்றுதுண்டோ. (உரு)

எறிதிரைக்கடல்வாய்வங்கத்திடையுற்றவின்னலெல்லா
மறனுடைவலியானீங்கியருமணிபெற்றுமீண்டு
வறிஞருக்கதையீவார்போல்வருந்திநீவாணிசெல்வி
யுறவெனக்குதவுமற்றிவ்வுதவிக்கோருதவியுண்டோ. (உசா)

ஈதெனக்கியம்புநின்னுலிப்பெருமகிழ்ச்சியுற்றேன்
வேதனன்மகளையின்னம்வேட்டுமெய்ப்போதன்றன்னை
யாதரம்பெருகப்பெற்றவ்வதிமோகன்முதலாயுள்ள
போதரும்பகையைமேலும்பொன்றுவித்திடுவனென்றான். (உஎ)

என்றிவைபுனிதைசெல்லிக்கியன்றநன்முகமன்யாவும்
வென்றியந்திறல்விவேகன்விளம்பிமெய்புளகமல்கக்
குன்றனதிரடோள்விம்மக்குளிர்முகமலர்ச்சிகூரா
னனையவேலைநியாயன்வந்தடியிற்றாழ்ந்தான் (உ௮)

சிரத்தைமீட்சிச் சருக்கம் முற்றிற்று.
ஆ_ திருவிருத்தம்-அ௱௬௯.

---

## உக - வது,
## விவேகன்போதகனை வரவழைத்தசருக்கம்.

வந்தடிவணங்கிநின்றமைத்துனன்வதனநோக்கி
யந்தவொண்டிறன்மாமோகனுதியரங்கங்குள்ளார்
தந்தமதியல்புநதெய்வத்தலமதொறுங்கரந்துநின்று
நந்தமர்செயலும்யாவுநவிலெனநவிலலுற்றான். (க)

நிருபநன்முதலோர்சேனைநெடுந்திருத்தலங்கடோறுஞ்
சுருபமதொளித்துந்தந்தநதொழின்முறையியற்றுந்தன்மை
யுருமெனத்தகையமோகனொற்றராலுணர்ந்துமுன்னர்
வருகலிதனக்குஞ்சாருவாகற்குமினையசொன்னான். (உ)

சஞ்சலன்றனைதன்னைத்தலமதொறுங்கரந்துளானா
நஞ்செனக்கவர்திமென்றுநடத்தினன்பின்னுங்கற்று
விஞ்சையையசாருவாகன்விளைத்திட விடுத்துத்தானும்
வஞ்சனைமகிழ்நன்மைவைகும்வாரணாசியில்வந்துற்றான். (௩)

சதுமுகன்மகளாற்றாதுசந்துவச்சிரத்தைசெய்ய
பதுமமெல்லடிகளேவைபடர்ந்ததும்வினவித்தன்பாற்
பொதுமகண்மிச்சாதிட்டிபுக்தனேமுதலினோனைக்
கதுமெனவெழுந்துசென்றுகவர்ந்திடப்பணித்துப்பின்னும். (௪)

காமனைவஞ்சித்தப்பாற்கடந்தநதருமன்செய்தி
சோமநாதத்துவந்தோன்சொல்லினாலுணர்ந்துநீங்கிப
போமவன்றன்னைப்பற்றிப்பொருக்கெனக்கொணரமானப்
பாமரன்றனக்குமீட்டும்பத்திரம்விடுத்தல்செய்தான். (௫)

இவ்வகைபுரிந்துவைகுமெல்லைநற்றலங்கடோறுங்
கைவலிக்கலியனெய்திக்கரந்துறைநமராத்தங்க
டெவ்வரிங்கிவரென்றெண்ணித்தெரிந்தெதிர்சீறும்வேலை
யவ்வயிற்பத்திமாதரவரவர்க்கருள்செய்தாரால். (௬)

ஆதலாற்கலியனஞ்சியரிசிவபத்தியாகு
மாதராரருளின்யாரும்வைகினரினையர்தம்மை
நோதலார்புரியவல்லாரென்பவைநொந்துமீண்டங்
கோதலாலுணர்ந்தமோகனேற்றார்க்கிதுரைப்பதானான். (எ)

பூங்கணைக்காமன்முன்னும்பொருபடைத்தலைவர்வைகு
மோங்குநற்பதிகடோறுமுற்றுநீரவரைநம்பா
லீங்கினிக்கொணர்திரென்றுவேவினனனையரெய்தி
யாங்கவர்க்குரைத்தலோடுமெனைவருமெழுந்துபோனார். (அ)

தருமன்மேற்றங்கைதன்மேற்சமணனுதியர்முன்சென்ற
கருமமிச்சிரத்தைசெல்லாற்கண்டனைசாருவாகன்
பெருமதமினிப்போயெங்கேபசுவதையமற்றுன்
றிருமணமுடித்தற்குண்டோசிந்தனையிறிதொன்றென்றான். (கூ)

வேறு.

சிரத்தைதவாய்மொழிப்பெள்ளமூதோடவ
னுரைத்தவாசகமுற்றசெந்தேனென
வரைந்தடம்புயன்வார்செவிபுக்கதா
லிரைத்தகாதலெழுந்தெழுந்தோங்கவே. (க௦)

வேதன்மங்கைவியன்மணங்கைக்கொள்வான்
சாதல்வெள்ளங்கருத்தையுமீக்கொளும்
போதவன்றன்மொழிமுகநோக்கியே
பாதபங்கயமவந்துபணிந்தரோ. (கக)

அயலமர்ந்தவொண்மரமைச்சரு
ணியமனென்பவனின்றுகைகூப்பியே
மயலகன்றிடமற்றதன்மேற்செயுஞ்
செயலுணர்ந்திவைசெப்புவதாயினான். (கஉ)

முறுகுவெஞ்சினமோகனையாதியாஞ்
செறுநர்குன்றினர்தெய்வவசத்தினால்
விறன்மிகுந்துவெளிப்படவும்பெற்று
றிறைவநந்தமொத்தலந்தோறுமே. (கங)

கொடியகாமனக்கோபனுலோபன்சீர்
மடிவின்மானன்மதன்மச்சரனெனுங்
கடியரோமுதலாயவக்கண்டகர்
நெடியதத்தநிலைவிட்டுமேபோயினர். (கச)

வந்துமோகனைமற்றவர்கூடியே
யுந்துபோருக்கொருப்படுமுன்னமே
யிந்துவாண்முகந்தேந்திழையாளைநீ
முந்துவேள்விமுடித்திடவேண்டுமால் (கரு)

நேயமுற்றநிருபகனோமுத
லாயமற்றைநம்மன்பினர்யாரையு
மேயவொற்றரையெத்தலந்தோறுமே
போயழைத்துவரும்பணிபூட்டியே. (கசா)

மற்றையோர்களும்வந்தபின்மாமண
முற்றவேண்டுமுயற்சியிதாமெனச்
சொற்றவாய்மைதுணைச்செவிக்காரமு
துற்றதாமெனவுள்ளத்துன்னினான். (கஎ)

நன்றுசூழ்ச்சியிதென்றுநயப்புறு
நின்றுமற்றநியமனையொற்றரா
லின்றழைத்தியாவரும்வைகிடஞ்
சென்றுபுக்கெனச்செப்பியபோழ்தினே. (கஅ)

நியமன்வேந்தனிருபமுமொற்றரு
முயர்தலங்களினுற்றவொய்திட
வயர்வுறுமலனைவர்க்கும்போக்கினான்
வயினமேதயனைப்போன்றவர்வாவவே. (ககூ)

சென்றவொற்றர்திருத்தலந்தோறுமே
நின்றதூயநிருபகனாதியோர்
முன்றொடர்ந்துகொடுத்தமுடங்கலை
யன்றுவாங்கியவர்முடிசூடினார். (உ0)

விளைவினும்மைவிவேகர்தங்கோமகன்
வரவழைத்தனனென்றவர்வாய்மையு
நிருபவாசகமுங்கொண்டுநெஞ்சினிற்
பரிவுமுன்செலப்பின்செலும்பாசத்தார். (உக)

பேதமற்றவன்றன்னைப்பிரிவுறும்
வேதனைப்பிணியன்றுவிலக்குவார்
போதலுற்றமையாலவர்புந்தியோ
காதலோமுற்கழிகொண்டதியாவையே. (உஉ)

போந்தநல்வழிப்போதனையுட்கொளும்
மாந்தர்சிந்தைவழித்துணையாய்வரத்
தாந்தமக்கண்மனைவியர்தம்மொடும்
வேந்தன்வைகிடம்யாவருமேவினார். (௨௩)

நிருபகன்பொறைநிச்சயன்சந்தியன்
றருமன்வீரன்சமன்றமன்சத்துவன்
பெருமையோரவிரோதன்பெருந்தவ
னருள்விராகன்சந்தோடனடக்கனே. (௨௪)

பின்னுமற்றுளபேர்களுமாதருந்
துன்னுநெஞ்சுமுகமுந்துணைக்கணும்
பொன்னுறுஞ்செங்கமலங்கள்பூத்தெதிர்
மன்னுசேவடிவந்துவணங்கினார். (௨௫)

வந்தடித்துணைதாழ்ந்துவணங்கினர்
தந்தமக்கெதிர்தக்கவரிசையா
லந்தமற்றவருள்புரிந்தப்புற
முந்தியுற்றமுகமனுஞ்சாற்றியே. (௨௬)

மனையுமக்களும்வாழ்வொடுதீதில
னெனவினாவுமிறைவனைக்கைதொழாப்
புனையுங்கல்விப்பொறைமுதலோர்கடந்
நினைவுணர்ந்தநிருபகன்கூறுவான். (௨௭)

ஆதியந்தமரிபத்தியோகினி
மாதுநீயும்வழங்கருட்பார்வையுண்
டோதுமின்பத்தொடுபெருவாழ்வுறு
மீதுபின்னெமக்கரிதோவெனா. (௨௮)

முன்னர்வந்துநியாயன்மொழிந்தசொ
லன்னதுண்மையெனும்படிக்காங்கவ
ரின்னதாமொன்றியம்பினரம்மொழி
மன்னர்மன்னன்வினவிமகிழ்ந்துமே. (௨௯)

சிரத்தையங்ஙனஞ்சென்றதுமீட்டும்வந்
துரைத்ததுமவனுற்றனயாவையுந்
தெரித்தடுத்ததிருமணச்சேதியு
மருத்திகூரவனைவர்க்குமோதினான். (௩௦)

வந்துவைகுமரபினர்யாவரு
மந்தநன்மொழிகேட்டலுமன்புறுந்
தந்தமுள்ளந்தழைக்குமுவகையா
லிந்தவார்த்தையிறைவர்க்கியம்பினார். (௩௧)

ஆர்வமுற்றவனேவருமையநின்
சீர்வதிந்ததிருமணக்கோலமெம்
பார்வையுற்றபயனெனக்காண்புறச்
சார்வதற்கினிதாழ்ப்பதிலென்னென்றார். (௩௨)

என்றுமற்றவர்கூறவுமீறிலா
வென்றிவேந்தன்விவேகனுபநிட
மன்றலங்குழன்மாமணவேட்கையா
னன்றுசெய்வதற்காவனசெய்குவான். (௩௩)

விவேகன்போதகனைவரவழைத்தசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அஎ௨.

## உ௪ - வது, உபநிடதைவேள்விச்சருக்கம்.



வேறு.

சற்சங்கமெனும்பல்கலன்கடரித்தவ்வாச
நற்சந்தனமேனிதிமிர்ந்துநலங்கொண்மாயன்
முற்சங்கரனார்சரிதாமிர்தமுற்றுகேள்விச்
சொற்சங்கையிலாமணிக்குண்டலந்தூக்கிமன்னோ. (௧)

நவமாமணிச்செஞ்சுடர்மார்பிடைநல்வியாச
னுவல்சூத்திரமாகியசெம்பொன்முன்னூலொடோங்கக்
கவின்றோரிதயங்களெனுங்களிவண்டுமல்கிக்
குவியாதலர்நல்லறிவாமலர்க்கோதைவேய்ந்து. (௨)

எறிவேலினுநீயவைதன்கணியார்செய்தாலுங்
குறியாமையைத்தாளிடும்பாதுகைக்கோலமாக்கிச்
சிறிதாயினுமேயொருகாற்பிறர்செய்தநன்றி
மறவாமையெனுங்கிரணச்சுடர்மவுலிசூடி. (௩)

வன்பென்பதகன்றடுதெவ்வரும்வந்துளாவி
தன்பங்கிலிரக்கினுமீந்துதகீசிபோல
வென்பும்பிறர்கேட்கினுமன்பினொடீதலென்னும்
பொன்பொங்கொளிக்கங்கணமுன்கையிற்பூட்டிமாதோ. (௪)

மன்னுங்கடுமோகனையாதியர்வன்மைநீக்கத்
துன்னுந்திறலாம்வலயந்திரமோளினேற்றிப்
பின்னுமபுவியோர்க்கபயப்பிரதானமீவ
தென்னுஞ்சுடராழிகள்பல்விரற்கேற்பதாக்கி. (ரு)

கருமத்தியனித்தநைமித்தியங்கைவிடாது
பருவத்தின்முடிப்பதுவாறுதற்பட்டமவீக்கிப்
பெருகுற்றதன்பேரியலானபிறங்குவெண்பட்
டரையிற்றிகழுத்தரியத்தொடுமாங்கணிந்து. (சா)

உன்னித்திருமால்சிவனாருட்குண்டெனகிழ்ந்து
மன்னித்தரையிற்பிறர்சோவுமதித்துநெஞ்சந்
தன்னிற்றளர்ந்தன்பிடைமல்குதடங்கணீரா
மன்னித்திலமாலிகைமார்பிலணிந்துமாதோ. (எ)

கடுவேநிகர்கண்டகராய்ப்பிறர்கைநடுங்க
வடுவேடையபோன்றவைசெய்யினுமஞ்சுறுதார்
வடுவேறியவெம்பழிக்குந்தன்மனத்துளஞ்சி
நடுவேயுறுநாமணனுமபொன்னனைஞானுமவீக்கி. (அ)

மாலாமிருடீர்த்துலகெங்குமவயங்கியாரு
மேலாமதியோர்கருத்துக்குமெட்டாதுயர்ந்து
மேலாகிவிரிந்தொடுங்காதவியாபகந்தன்
பாலாமதியாகியவெண்குடைபாங்கினோங்க. (கூ)

தண்சார்மொழிந்தித்தவநித்தவிசாரணைபபெண்
வண்சாயன்மயிற்கிணைநற்கதிவாஞ்சைமாதோ
டெண்சார்வுறவோர்வுறுசாத்திரமென்னலாகும
வெண்சாமரமங்கிருபாலுமெடுத்துவீச. (கய)

துகளற்றுயர்வேதநடத்துதுரங்கமாகப
பகர்சத்தியனேயவைதூண்டுறுபாகனாகப்
புகலுற்றிடுமெவ்வுலகத்தினுமபோங்குசோதித்
திகழ்தத்துவமாகியசெஞ்சுடர்த்தேரினேறி. (கக)

பத்திக்குலமங்கையர்பார்வையெபபாலுமெய்தச்
சுத்திக்குயிரன்னவண்முன்புதொடர்ந்துசெல்ல
முத்திக்குறுகாதலுமங்கொர்முகத்தினேக
வெத்திக்குநிரூபகஞாதியினத்தர்சுற்ற. (கஉ)

இயமன்முதலாகியயோகரொண்மருந்த
னயல்வந்துநெருங்கவாசாரனொடுத்துவைத
னுயருஞசுசீலன்றருமன்முதலோர்கள்சூழ
வியனங்கொருதிங்களைச்சூழ்ப்பலமீன்களென்ன. (கங)

கதியுற்றநிவிர்த்திபெருநங்கருணைக்கரும்பு
முதிதைபபெணுபேட்சைமயித்திரிமுற்றுநீதி
மதியொத்தமுகத்துமடநதையர்மற்றையோரும
விரிபிற்றொடர்நன்னெறியூடுமிடைநதுசெல்ல. (கச)

இத்தன்மையித்ரிகியபல்சிறப்பெய்திவேத
விந்தையனவிவேகனெழுந்தருண்மேன்மையுன்னி
யதநன்மைமகிழ்ந்தயனோதவுள்ளன்புகூர்ந்து
மெய்த்தன்மகரந்கலர்வாணிசெய்வீறுசொல்வாம். (கரு)

வேறு.

தாரகமெனுநிருமுகமதசெயாளிருந்தாதநதார்குழலாய்ச்சுருதிகளேதாழநதவளைக்குழையாய், நேரிலகும்விதிமணிகொணுசியர்த்தவாதநீதியாயுகளுமிருநீலவரிவிழியாய்ப, பார்மிகுசற்குணமுநிர்க்குணமுமிருகரமாய்ப பகர்சீவபரஙகளேபணைத்தபயோதரமா, யாருமறிவரிதாயவாக்கியஞசிற்றிடையாயனையபிரசரணமலரடியிணையாயுடையாள். (கசா)

அஞசுகோசஙகளுமேமயைநதுயிராய்ச்சச்சிதானநதமுபபத்தியகமுஞசீவனுமாய், விஞசுமுபக்கிரமமுபசஙகாரநடையாய்மீமாஞசைமாவாக்கியமென்சொலுஙகண்டமுமா, யெஞசுறுவகரமுதலாகியவைமபூத்தோரொழுத்துமறறையவயவஙகளென்னலாய்த்தவளச், செஞசொலாளின்றெடுத்தசெல்வியுபநிடதச்சேயிழைக்குப்பேருவகைத்தெண்டிரைநீராட்டி. (களா)

பதமென்னும்பட்டாடையுடுத்திமழையளகபந்தியிற்செந்தொடர்மொழியாமபனிமலர்த்தார்சூட்டிச், சிதைவினறுந்துவர்வருணமெனுங்களபநதிமிர்ந்து திருமேனிக்கலங்காரத்திருப்பணியுந்திருத்தி, மதர்விழிக்கும்பிரமாணமாகியமைமெழுதிமதிநுதற்குவிந்துவெனுமணித்திலகந்தீட்டி, யிதமுறுநற்சத்தியும்பூருவமுமென்னுமெழிலொளியைக்கீதையிலைவிலங்கிடச்செய்தாளால். (கஅ)

வேறு.

ஈதவடன்மகட்கியற்றுமெல்லையில்
வேதனுமுணர்வுடைவேநதனெய்திட
மாதவருள்ளமாம்வனசக்கோயிலு
ளாதரமாகுமெல்லணையமைத்துமே. (கக)

கற்றுணர்கல்வியாங்கலைவிதானமுஞ்
சொற்றொடர்நறுமலர்த்தொடையுமேற்புனைந்
துற்றதண்ணளியெனவோங்கும்பன்மணி
யெற்றிகழ்விளக்கமிட்டெழிலியற்றியே. (உ௦)

இத்திறம்பல்சிறப்பெய்துவித்துழி
யுத்தமர்கோன்வரவொல்லையெய்தியே
மெய்த்தலத்தயனடிவிளைவிற்றாழ்ந்துயர்
சத்துவன்றிருமகள்சாற்றினளரோ. (உக)

முன்புகுந்தவள்பகர்மொழியினவலு
மின்புறமனங்களித்தெண்கண்வேதியன்
றன்புடையனையனைத்தருதியென்றுதன்
னன்பினையெதிர்கொளவவர்முன்போக்கினான். (உஉ)

எதிர்வரவாங்கவனேவுமன்பொடு
மதியுடைமன்னவன்மருங்குசூழ்வரு
முதிருறுநிருபகன்முதலினோடொடும்
விதியுடைமாநகர்விளைவினெய்தினான். (உ௩)

ஏறியவிரதம்விட்டிழிந்துசிந்தையுட்
டேறியதுணைவருந்தானுஞ்சென்றுபுக்
காறியன்முனிவரோடாசிகூறிட
மாறினன்முகன்மலர்ச்சரண்வணங்கினான். (உச)

வந்தடிவணங்கியமதிவிவேகனுக்
கந்தணன்முகமனோடாசியும்பகர்ந்
துந்துபேரன்பினரோடுஞ்சீரியர்
சிந்தையங்கோயிலிற்சென்றுற்றனரோ. (உ௫)

திருமணமண்டபச்சிறப்புநோக்கியே
நிருமலவிரத்தியுநெடுவிராகனுந்
தருமனுங்கருணையுஞ்சமனுஞ்சாந்தியும்
பொருவினற்சிரத்தையும்புனிதைகேள்வனும். (உ௬)

யமநியமாதனப்பிராணுயாமநீள்
கமையுறுபிரத்தியாகாரதாரண
சமனிலைத்தியானசமாதியென்றுசொல்
லமைவில்பல்கிளைகொளட்டாங்கயோகரும். (உஎ)

ஒண்டருவிவேகனுமுடன்பிறந்தவுப்
பண்டருகிளவியர்பலருந்தாயரு
மெண்டருதவனுமற்றெவருமாங்கதிற்
கண்டசித்திரம்பலகருத்துளுன்னிஞர். (உஅ)

நிருமலமாய்நீணெடியதற்பரம்
பொருளெனுமொருபரிபூரணத்துரு
வருவமதாகியுமரியயன்சிவ
னுருவமதாகிமூவுருவுகொண்டதும். (உகூ)

முகமொருநான்கொடுமுளரிப்பீடமே
லகமுறுமிராசதகுணத்தொடண்மியே
தகவுறுபல்லுயிர்ச்சராசரங்களாம்
பகுதிகள்யாவையும்படைத்துவிட்டதும். (நூ0)

சங்குசக்கரத்தொடுஞ்சத்துவத்தியற்
பங்கமில்குணத்தொடும்பரவுபாற்கட
லங்கதின்வைகியவ்வயன்படைப்பூறத்
தங்குபல்லுயிரொலாந்தான்புரந்ததும். (நூக)

மருவுமுள்ளன்பர்தம்பிறவிமாற்றவு
மருளியநெறிக்கவுமறநிறுத்தவும்
பெருகுமவ்வரியுருப்பின்னுமீரைந்து
திருவவதாரமாய்ச்செனித்துவந்ததும். (நூஉ)

இப்பிறப்பியன்முடிவின்னவண்ணமென்
றுப்புறவிசையனுக்கோதியுவ்வுரை
யப்புறத்தையுறுமனையனஞ்சவே
மெய்ப்புறக்காட்டியவிசுவரூபமும். (நூந)

அம்பரீடன்றனக்கருள்புரிந்தது
மிம்பரோர்பஞ்சவரிடுக்கண்டீர்த்ததும்
வெம்புவாளவுணரைவிலக்கிவேலைவா
யும்பரானவர்க்கமுதுணப்பகுந்ததும். (நூச)

ஆலமேநிகர்கராவடர்க்குமந்தநாள்
நீலமேனிக்கரியொன்றநீரிடைத்
தாலமேயனையகைநீட்டித்தற்பர
மூலமேவாவெனமுனர்வந்ததும். (ருரு)

இவ்வகைபுரிந்தமையெண்ணில்கோடியா
மவ்வரிசரித்திரமனைத்துமாங்கவர்
கைவருநெல்லியின்கனியிற்கண்ணுறச்
செவ்வியகரங்கடஞ்சிரத்திற்சூடினார். (ருசா)

மற்றொருவராவுமான்மழுவுஞ்சூலமு
நெற்றியிற்கண்ணுமோர்நீலகண்டமும
பெற்றியற்றுமதப்பெருங்குணத்தொடுங்
கற்றடங்கயிலையங்கடவுளாயதும். (ருஎ)

அண்டர்தங்குறைதவிர்த்தாழிவெவ்விட
முண்டதுங்காலனையுதைத்துமற்றொர்மார்க்
கண்டனைப்புரந்ததுங்காமனைக்கடிந்
தொண்டவர்க்கறிவுபதேசஞ்செய்ததும். (ருஅ)

முத்தமிழ்முதலியர்மூவர்தங்கட்கும
வத்துவைத்தொழுந்திருவாதவூரர்க்கும
பத்தராமோரறுபத்துமூவர்க்கு
மெய்த்ததாட்டுணைமலர்வீடளித்ததும். (ருகூ)

பின்னருமிவ்வகைபெறவளித்தமை
யென்னலாஞ்சரித்திரமெண்ணிலாவெனா
வன்னவன்றிருவிளையாடல்யாவையு
முன்னவர்கண்டுதமமுடியிறைஞ்சினார். (சo)

புகன்மறையாகமபுராணசாத்திரந்
திகழிதிகாசவித்திறத்திற்பின்னரும
பகர்வுறுமவையெலாம்படிவமகொண்டவ
ணிகழ்வுறுநிலையமாய்நின்றதன்மையும். (சக)

வான்றொடருலகத்துமற்றையண்டத்துஞ்
சான்றவரவரவர்தங்கண்மேன்மையு
மூன்றுயர்காலத்துமுடியுஞ்செய்கையுந்
தோன்றுறவியந்தனரதனுட்டுன்னினார். (சஉ)

மருவியாங்கவர்கடாம்வைகியவ்வழிப்
பொருவருமொருபரம்பொருளையுன்னுமுன்
னருமறையறிவருமகண்டபூரணன்
றிருவுளமுணர்ந்தருள்சிறந்துசெய்ததால். (சங)

ஆயபோதார்திருவருளவயவத்தொடு
மேயசற்குருவெனவெளிப்பட்டாங்குறு
தூயவமொழுந்தடிதொழுதிறைஞ்சவந்
நாயகக்கோயிலுட்புகுந்துநண்ணியே. (சச)

திருந்தடிவணங்குமத்திசைமுகன்றரு
மருந்தமணியத்திருந்தவிசிலாங்கன
மிருந்தனேவோரையுமிருத்திநொன்றருள்
பொருந்துநல்லாசியும்பலபுகன்றபோ. (சரு)

உணர்வுடைவேந்தையுமொருபுறத்தினி
லணைவுறவிருத்தியவ்வயனைநோக்கிமா
மணவினைக்கேற்பவையோடவ்வஞ்சியைக்
கொணர்தியாலிவ்வயினென்றுகூறினன். (சசு)

வேதியனப்பணிகொண்டுவேட்பவைக்
கோதியபல்பொருளுடனமைத்தயற்
கீதையைநோக்கியக்கிளியின்மென்மொழி
மாதையென்வயிற்றருகெனவழுத்தினன். (சஎ)

வேறு.

கீதையங்கதுசிரத்தினிற்கொடிருகெண்டையங்கணொருதொ ன்டைவாய், மாதையங்குவரவோதலும்பெருமகிழ்ச்சிகூர்திருமன த்துளே, யாதரம்பெருகுமஞ்சொல்வாணியெனுமன்னையுந்துணை கொள்பின்னையும், வேதமங்கையர்கள்சாத்திரங்களெனுமின்னனொ ரொடயறுன்னவே. (சஅ)

செஞ்சிலம்புபுனைபஞ்சின்மெல்லினியல்சீறடித்துணைகணுறுபூங் கஞ்சமுங்கவினழிந்தொதுங்கநகைகளுமொய்யமலர்மேலுமே [ர் யஞ்சியஞ்சிநடையன்னவன்னமெனவல்லவல்லவெனமெல்லவோ வஞ்சியங்கொடியெழுந்துவந்தனைமாவியன்சபையின்மேவினள்

வந்துமுந்திமணிமண்டபத்திடைவதிந்தசற்குருமலர்ச்சரண்
சிந்தையன்புகொடிறைஞ்சிநாணொடுதிகழ்ந்திடுந்திருமுகங்கவிழ்ந்
தந்தணம்புயமலர்ச்செழுந்தவிசிலயவிருந்துநெடிதன்புறுந்
தந்தைதன்புடையில்வைகினணெடியதடமலர்க்கணுபநிடதையே.

மன்றலங்குழலியளவிலின்பமொருவடிவுகொண்டதெனவந்தயற், சென்றயன்புடையிருந்தகோலமிகுதீர்த்தராயுமெதிர்பார்த்துளார், நின்றுகண்களுமுகிழ்ப்பதன்றியொர்நினைப்புமின்றிமிகநெஞ்சழிந், தொன்றுமங்கனுனோராதிருந்தனர்களோவியத்தினியலொப்பவே. (ருக)

மாநிவிர்த்திமுதலாயமங்கையரும்வஞ்சிவிஞ்சுதிருவடிவெனுந்தேனிலுற்றசிறைவண்டெனும்படிதியங்கினொனின்மயங்குருரானமற்றவரியாவரோபுருடரவணலம்புணருமறிவுடைக்கோனிகழ்ச்சிபிறிதென்படாததுகுணித்தியாவர்பிறர்கூறுவார். ()

தானலாதுபிறிதில்லையென்னுமதுதன்னுளேயறிவுறுத்துதற்கானபேதையவளன்றியில்லையெனலனைவருக்கும்வெளியாகவேமானனுருமவனுற்றமைந்தருமனோலயம்பெறவதிந்திடுந்தேனனுளையயல்வரவழைத்தனையதேசிகன்னினையசீர்செய்தான்.()

ஆதனத்துயர்விவேகனுற்றிடவமைத்துநீர்கொடயனவன்மலர்ப், பாதசுத்திசெய்துதனைநல்குத்ல்பணித்துநல்வினைகள்பலவுமா, யோதுநெற்பொரிநெய்சமிதைஞானமெனுமோமவெங்கனலினூட்டியக், காதலிக்கொர்திருநாணணிந்தனையள்கைக்கொடுக்குநெறிகாட்டினன். (ருச)

கைகொடுத்ததுபிடித்தபின்னுமவள்கால்பிடித்துவெளிகண்டவன், மெய்கொடுத்தெதாரிலக்கணைதிரயமினிர்சுமங்கலியமினொடு, மைகொடுத்தவிழிமகளிர்சோபனமுமறைமுழக்கொலியுமல்கவே, நெய்கொடுத்தசுடரனையவன்சரணிறைந்தகாதலொடிறைஞ்சினன். (ருரு)

வானுளோர்கண்மலர்மாரிதூவினர்நன்முனிவராசிகள்வழுத்தினர்கானகந்திருவர்யாழினேழிசைகள்கடலினாமுதெனப்பெய்தார்தானவாதியர்செருக்கொடுங்கிவலிதாழ்ந்தொதுங்கினர்தடாரியுமேனைவாச்சியமுமமரதுந்துமியொடெங்கணுந்தொனியெழுந்ததே.

அன்னவேலைநெடிதாசிகூறியவனன்பெனும்பொருளளித்தல்கொண், டுன்னுதேசிகனகன்றபின்னர்மலரோனும்வாணியுமுவப்பவே, மன்னுதாள்களில்வணங்கியங்கனையர்மக்களைப்பெறுதிர்வாழ்திரொன், றின்னவாய்மொழியியம்பல்கொண்டுபினெழுந்துதாய்தனையிறைஞ்சினன். (ருஎ)

தனைவணங்குதிருமகனுடன்மருகிதன்னையும்பெருகுதயவுட
னனையளங்ஙனமெடுத்தணைத்துமிகவாசிகூறியினியறிவிலார்
வினைகடிந்துமிகவாழ்திரொன்றுசிவவிண்டுபத்திவிழியருளிரு
வினியநீரயினிமுன்புகுற்றியவிர்கரப்பும்வாணுதலினேற்றினள்.()

மருவுமங்கணுறுமாதர்மக்கள்பிறர்மற்றுளோருமவரவர்தமக் [மே
குரியசெய்வினைசெயப்புரிந்தபினொருறைறயுளெய்தி மலரணையின்
னிருப்னுங்குலவுதர்க்கவாள்விழியுநீருநீருறுநியாயமா
யிருவர்நகமுமுடன்கலந்துருகியேகரூபமெனலாயினர். (ருக)

ஞானபோகமிருவீருநயந்தினியநண்புகூர்தருமநாளிலன்
பானயோகர்முதலாயினோரொடுமெடுத்துவாணியையுமயனையுந்
தானுலாவுபதியெய்துதற்குவிடைதருகெனத்தொழுதுசாருமுன்
னுசிதனமதாகவன்பினையளித்துவேதன்விடையருளினன்.(கூ0)

மோகருதியர்களவர்தொலைத்துவினைமுற்றவாசிகண்மொழிந்துமே, லேகநான்முகன்விடுக்குமெல்லையுபநிடதவஞ்சியுமிறைஞ்சியே, யோகநானும்விடைதருகெனுமுன்னருள்செய்துகீதையொடுபோகெனு, வோகையாகிவிடையுதவினர்கள்கலையுருவமானுமலரோனுமே (கூக)

மற்றையோரும்விடைகொண்டுமன்னனைவணங்கிமுன்செலமருங்கிடைத், துற்றஞானமதயானைசேனைகடுரங்கராசிகணெருங்கமைக், கற்றைவார்குழலினர்களும்புடைகலந்துசூழவுபநிடதையைப, பெற்றதாயொடுதந்தையாதியர்கள்சிந்தையாவுமவர்பின்செல. (கூஉ)

பொருவில்தத்துவமதானதேரினியல்பொலியுஞானவரியணையின்மேன், மருவுநற்சுமதியொருபுறத்துமலர்வாணிபேதையொர்மருஙகுமா, யிருபுறத்தினுமிரண்டுதேவியருமின்பமுற்றுவரவெதிரிலா, நிருபனுந்தமன்விவேகன்முக்குணமுநீக்கிநின்றநெறிநோக்கினன். (கூங)

சேலைவென்றவிழிமாதொடங்ஙனொருதேரின்மன்னன்வருதிருமணக், கோலமும்பெருமகிழ்ச்சியுந்தம்விழிகொண்டுகண்டுகளிகூர்வுறச், சாலவுஞ்சரணபங்கயந்தொழுததமனாயன்பினொடுதழுவியே, பாலுடன்கனிகடேனியைந்ததெனவவரவர்க்கினியபன்னினன். (கூச)

முன்புவந்துபுடைசூழ் விராகர்பதிமுதலிஞேர்களொடுமுறைமை
பின்புவநதநிருபகணேயாதிபலபேரொடுங்குலவுபார்புகுந் [யாற்
தன்புவந்தபெருவெள்ளமுள்ளமுறவணையர்வைகுமிடமணுகியே
வன்புவநதளவளாவியங்கினிதிரு்வைகினன்சுமதிமகிழ்நனே.(சுரு)

உபநிடதைவேள்விச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம - கூநஎ.

---

## உங - வது, சக்க்ரதீர்த்தச்சருக்கம்.

வேறு.

அன்னகாலையிற்பக்கல்சூழ்நதிருக்குநர்யாருந
துன்னவாஙகனமவைகியவுபநிடத்தோதை
மன்னுகாதலன்மலரடித்தாமரைவணஙகி
முன்னமேவியநிருபகணிணேயனமொழிநதான். (க)

சிற்றிளமபிறைநாடொறுமோரொருசீராய்
முற்றுகின்றதுபோன்றதானின்றிறன்மோகன்
பெற்றவெண்மதிபின்னுறத்தேய்நதிடுமபிறையாய்
வற்றுகின்றதாலவரவர்க்குறுமவிதிவசத்தால். (உ)

தறுகண்மோகனுமிருளுறுமானிடச்சகோரப
பறவைகட்குநின்ஞானமாநதெண்ணிலாபபரபபி
யுறுதுயர்பபசிதெறமுழுத்திங்கள்போன்றுதித்தும
வறுமையுற்றவைவருநதாமிருப்பதும்வழக்கோ. (ந)

முழுத்தவல்விணக்கோடையானமுறுகியமனுவின்
குழுத்தளர்நதிடநோக்கிபுமுபநிடக்கொமபிற்
பழுத்துநின்றமெய்ஞ்ஞானமாமபழத்தைநீபடைநது
மழுத்துமன்பிகநதருள்செயாதிருபபதோவறமே. (ச)

பருவநோக்கிவான்மழைபொழிநதிடுவதுமபகலோ
னிருடுரப்பதுநதண்புனறிகண்மற்றெவையும
பெருகுகிற்பதுமொபபிலாநற்குணபபெரியோ
ரருள்சுரப்பதுநதமக்கொருபொருள்குறித்தன்றே. (ரு)

இணையவாதலினிக்கணத்தெம்மொடுமினிநீ
யணையர்வைகியகாசிமாநகரினூடடுத்து
விணையெலாமறவேரொடுங்கெடுத்துநல்வெற்றி
புணையலாமியற்பருவமீதென்றிவைபுகன்றான். (சா)

ஈதவன்பகரொல்லையில்வல்விரைந்தெழுந்தே
நீதியகருணர்வேந்தனைத்தொழுதியனியமன்
போதருமபகைதுரந்திடப்பருவமிப்புறமென்
றோதுகின்றவையொக்குமென்றினையனவுரைத்தான். (எ)

வேறு.

இடரினின்சிந்தனையின்றுகாறுமே
தடைபிறிதினமையாய்முடிந்ததன்மையான்
மிடையுநின்படையினிமேலுநதெவ்வரைக்
கடைமுறைவெஞ்சமர்கடத்தறிண்ணமால். (அ)

சற்றடம்பயிலுமிக்காடுவிட்டினி
யுற்றநமபடையெலாமொருங்கெழுந்துநம்
பற்றலருறையுமபபதிபுகாமலே
மற்றொருபுண்ணியதலத்தின்வைகியே. (கூ)

பண்டையோர்கூபோதனன்பாண்டுமைந்தரை
மண்டுகொன்புகுத்தியுமாலைத்தூதுவிட்
டண்டுபெருரிமைகேட்டவன்மறுத்தபின்
விண்டுபோரதச்சமர்விளைத்தநீதிபோல. (க0)

தூதுவனொருவனைத்தொடரப்போக்கியப
பாதகமோகனைப்பாரொலாமெமக்
கிதியென்றுரிமைகேட்டில்லையென்றிடின்
மோதிவெஞ்சமர்பொரான்முறைமையாமென்றான். (கக)

இவ்வகையவன்சொலவியல்பிதாமெனு
வவ்வயினிருந்தவராருங்கூறவே
செவ்வியசெங்கையுஞ்சிரமுங்கம்பியா
மெய்வருங்கொற்றவனிதுவிளம்பினான். (கஉ)

சிலமுமவெஞசமர்செய்யுஞ்சூழ்ச்சியு
மேலிதுவலதிலைவிளைவுமீதென்று
காலமொர்மூன்றையுங்கருதுங்காவல
னூலுணர்நியாயனையருளினோக்கியே. (கந)

எண்ணியறபடையொடுமெழுந்தியாமெலா
நண்ணியுற்றிடத்திருநாட்டிலீட்டிய
மண்ணியற்றலங்களில்வயங்குமாங்கொரு
புண்ணியத்திருத்தலம்புகறியாலென்றான்.

அங்கவாசகஞ்சொலுமவனைப்போற்றியே
கங்கைமாநதிபயில்கவுடதேயத்திற்
றங்குராடாபுரத்தலத்திலுள்ளதோர்
செங்கண்மால்சக்கரதீர்த்தமென்பதே. (கரு)

பங்கயனுட்டினும்பைம்பொனுட்டினும்
பொங்குமத்தலத்துளபுனிதமில்லையா
லங்கதன்பாங்கரினளவினம்படைச்
சங்கமுமெழுந்துபோய்த்தரிக்கலாமென்றான். (கசா)

என்றவனியம்பலுமியன்றகானம்விட்
டன்றுதன்மனைவியராயினோரொடு
மொன்றுபல்படையொடுமுயர்விவேகர்கோன்
சென்றனன்றத்துவத்தேரின்மீதரோ. (கஎ)

நீள்கொடைமன்னவனெடும்பொற்றேர்மணித்
தாள்கிளர்ந்தெழுமத்தரியலார்க்குநதங்
கேள்கிளர்மாதர்க்குங்கிடைப்பதென்கொலோ
தோள்களுங்கண்களுமிடந்துடித்தவே. (கஅ)

தீநிகர்வெமபிணிதீர்க்குமூலிகை
கானிடையிருந்துதங்கைவந்தாலென
மானிடர்பவங்களைமாற்றுதற்குமெய்ஞ்
ஞானநாயகன்படைநாட்டில்வந்ததால். (ககூ)

வேறு.

இனையபல்வளநாடெலாமியன்றிடவேகியுமதிநாத
னனையதெய்வமாங்கவுடராடாபுரத்தகன்றசக்கரதீர்த்தந்
தனையடுத்தயற்சார்ந்தநற்படையொடுந்தானுமங்ஙனம்வைகி
நினைவினுற்றமையிவைபுகன்றனனயனீதிகேள்வனைநோக்கி. (உ௦)

ஈதுகாலமீதிடமிதுநந்திறமிதுபகைவலியீது
நீதியீதுநற்றருமமுமீதுநன்னினைவிதுநெறியீதென்
றோதியோர்ந்துணர்கல்வியிற்சொல்பகையொன்னலர்க்கஞ்சாமற்
றூதுபோயுரைசெய்பவர்நீயலாற்சொல்பவர்பிறர்யாரோ. (உக)

விரைவினெய்திமாமோகனையடுத்துநம்வியன்வரவெடுத்தோதி
யுரிமையாகுமிவ்வுலகினைக்கேட்டியாலுரைத்ததற்கிசைந்தானே
லரிதலஞ்சிவதலமறையோர்பதியருந்தவருறைசூழற்
றிருநதித்துறைபுண்ணியருறையுளித்திறமெலாம்விடுத்தேகி. ()

துருக்கர்பப்பரரொயினர்கீழினத்தவர்சோனகரினையோர்தா,மிரு க்குமத்தலமெத்தலமவ்விடமெங்கணும்புகுந்தாங்கே, செருக்கிவா ழ்நியென்றுரைத்தியாலவ்வகைசெய்வதற்கியையானேல், வருக்க மோடுவெம்போர்பொராநாளையேவர|ச்சொலென்றிவைசொன்னான்.

நீதிநாயகனப்பணிதலைக்கொடுநிவிர்த்திபாலனைப்போற்றிப்
போதன்மேயினன்வாரணாசியினிடைப்புண்ணியசரிதந்தோன்
காதல்கூருபநிடதைமாமணமுதற்கழறினங்கடுமோகன் [வாம்.
றாதுபோயினர்படைஞருக்குரைத்தமைதொடுத்தினியுரைசெய்

சக்கர்தீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் - கூகூக.

## உச - வது, காமனுதியர் சருக்கம்.

மருவுகாசியில்வைகியமோகமாமன்னவன்விடுதூதர்
பொருவிறேயங்களெவற்றினும்விரைவினிற்போயினர்புகுந்துற்ற
கருமமாங்கவரவர்க்குரைத்தழைக்குமுன்காமனுதியர்வேந்த
ணிருபம்வாங்கினர்சிரங்களிற்சூடினர்நிமிர்ந்தெழுந்தனர்மாதோ.

மடிவில்காமன்வெங்கோபனுலோபன்மாமச்சரன்சங்கற்பன்
கடியதாமதன்மதனிராசதன்கொடுங்கலகனச்சந்தேக
னடல்விகற்பனதன்மனக்ரமன்றுக்கனனருகனவமானன்
விடயசங்கனுள்வயிரனுசன்றிறல்வெகுமுகனிவர்யாரும். (உ)

இருள்பரந்ததோவிடமெலாமிகத்திரண்டெழுந்தவோநெடும்பா ர்மே, லருளில்வெவ்வினையாவுமாங்கொருபுடையடர்ந்தவோபல நோயு, முருவுகொண்டுமற்றோர்புறத்துற்றவோவென்றுரவோரஞ் ச, மருளுறும்படையோடும்வந்தடுத்தனர்வாரணாசியின்மன்னே()

கடியபாவங்கள்யாவையுந்தீர்த்திடுங்காசிமாநகர்தன்னி
னெடியகண்டகர்யாவருமவ்வயினெருக்கிநின்றமையாற்றன்
முடியயர்ந்திடுமரவினுக்கரசனுமுதுக்குறுக்கியபாரப்
படிமடந்தையுமகமகிழ்ந்தனர்தங்கள்பாரநீங்கிடுமென்றே. (ச)

இனையரவ்வயினிவ்வணமெய்தியவெல்லையிலதிமோகன்
கனைகழற்றெழுதெய்தியத்தூதுவர்காமனுதியர்யாரு
மனையுமக்களும்வன்படையுங்கொடுமென்னநின்பணியேவல்
புனையுஞ்சென்னியர்வந்தனரொன்னுமுன்புகுத்துதிரீங்கென்றான்,

மாரனுதியர்க்கவ்வுரைபுகலுமுன்வந்துகண்களிகூர்ந்து
சாருவாகன்வெங்கலியகங்காரனசத்தியனவன்றனைத
பேருலாவியகுதர்க்கன்மற்றேரொடும்பேதையர்குழுவோடு
நேருலாவியூங்கிருப்பவன்றனைமிசைநிபிடமிட்டெதிர்தாழ்ந்தார்.

வணங்கிநின்றவர்யாவையுமருங்குறவரிசையிற்கைகீட்டி, யிணங்குமன்பினொடிருத்திவாண் முகந்தொறு மிணைவிழியருளேக்கி, யிணங்கனொடுமக்களுநன்றுகொலவரவர்திறன்மேன்மைக், குணங்குங்தீங்குமற்றுண்டுகொலென்றிவைபன்முறையுரைசெய்தான்.

நிறைந்தவெவ்விடமன்னவனவ்வுரைநிகழ்த்தலுமனேவோருஞ்
சிறந்தமூவுலகத்தினுமரியயன்சிவன்முதலோருள்ளுரு
முறைந்தநாயகவெங்ஙனமிருக்கினுமுன்னையங்கொருபோழ்து
மறந்ததின்றியேயவைகியவெமக்குநல்வாழ்வரிதோவென்றார். (அ)

பரவியசங்ஙனமவரவரிவ்வுரைபகர்கின்றவிடையேதன்
கரமமைத்தனேவோரையும்வேந்தனேக்கைதொழுதடறகாமன்
விரவுமஞ்ஞுமாபுரம்விடுத்திங்ஙனமேவிமற்றெமையெல்லாம்
வரவழைத்திடுங்காரணம்யாதுகொன்மன்னநீபுகலென்றான். (கூ)

வேறு.

அங்கவனஃதுரைசெய்யநகைத்தவகங்காரன்
றங்கியவீரரியாவரையுமெதிர்தாளேக்கிக்
கொங்குறைதார்முடிமன்னவன்முன்புரைகூசாதே
பொங்கியநெஞ்சுபொருமையினிவ்வைபுகலுற்றான். (கய)

பங்கமில்செய்கைவிவேகனுரைத்தபடிக்கெய்தி
நங்கருதார்நிருபகன்முதலோரினநாட்டிங்கண்
டங்கள்சுரூபமறைத்துமரோடுதழீஇயங்கே
யுங்கடலங்கடொறும்புகலுற்றமையுணரீரோ. (கக)

வந்துபுகுந்தவர்கைதவமாகவதிந்தப்பாற்
றந்தமியற்கைபயிற்றியபோதுதவந்தானுஞ்
செந்தழல்வேள்விசெபங்கண்முதற்பல்செயல்யாவு
மந்தணரோமுதலோர்கடொடங்கியதறியீரோ. (கஉ)

அன்னவையொற்றருணர்த்தவுணர்ந்திறையவன்வைகு
நன்னகர்விட்டிவணின்னகருற்றதுநாடீரோ
சொன்னதலங்கடொறும்பினொளித்துறைதுன்னார்மேன்
மன்னவனேவலின்வெங்கலிசென்றதுமறியீரோ. (கங)

தட்டியறைந்தசெதனும்படியுங்கடலந்தோறு
மட்டியல்வார்குழல்யோகினியென்றுமாமடவார்பா
லொட்டியதெவ்வனையின்னவனென்னவுணர்ந்தங்கே
கிட்டியவெங்கலிபட்டகொடுந்துயர்கேளீரோ. (கச)

பரந்தவிழிச்சிவபத்தியியோகினிபண்பாலே
துரந்துவிடுத்தபின்வெங்கலியைப்பலதுன்னூர்தாம்
புரந்தொறுமின்னவருக்கிவனென்றுபுகப்பெற்றோர்
கரந்துறைகின்றமைபோய்வெளிநின்றமைகாணீரோ. (கரு)

பஞ்சடியுச்சியில்வைக்கவிசைந்தியல்பண்போலு
நஞ்சனகண்ணியரின்பமுயங்கநரர்க்கெல்லாந்
தஞ்சமிதன்றிமறித்திலையென்றருஞ்சார்வாகன்
விஞ்சையையெங்கும்விளம்பினனென்றல்விஞுவீரோ. (கசா)

மட்டியலம்புயன்மகளைமணஞ்செயமதிநாதன்
விட்டிடுகின்றசிரத்தையவவ்வவிளைந்தங்கே
யொட்டியபுத்தனும்வெய்யகபாலனுமோர்மிச்சா
திட்டியுமெய்தியதின்னமுநீரதுதேரீரோ. (கஎ)

நெய்தவழ்வேள்விபுரிந்தொருதன்னெடுநேசம்போற்
கைதவமன்றுபுரிந்தகல்கின்றகடுந்தன்மன்
மெய்தளரும்படிவவ்வுமதற்கொருவிறன்மான
னெய்தியதின்னமிவ்வேளறியாமலிருந்தானே. (கஅ)

இங்ஙனம்வந்துவிளைவியதென்னைநும்மியனன்றுட்
டங்ஙனமின்னவையாவுமியங்கவுமறிவின்றி
மங்கையர்கொங்கைமுயக்கிலுணர்ச்சிமறந்தீரோ
துங்கமலர்ச்சயனத்திடைகண்கடுயின்றீரோ. (கக)

என்றிவையோர்மமதைக்கொருதாதையியம்பாமு
னன்றிதுவென்றுதுளக்கிமுடித்தலைநகைசற்றே
மென்றுவர்வாயிலரும்பநகைத்தடல்விற்காமன்
வன்திறன்மன்னவையூடெதிரின்னனவகைசொல்வான். (உ0)

ஒன்னலர்தம்முருமாறிநம்முருவொளாளித்தாரா
மன்னவர்சிற்சிலருக்கியன்மேன்மையறைந்தாராஞ்
சொன்னவர்சொற்கொடுபூசுரர்வேள்விதொடுத்தாரா
மன்னவரம்மொழிகேட்டவரின்னகர்வந்தாராம். (உக)

சித்தசனுகியும்யானறியாதவர்சிலருண்டாம்
பித்தனொனுங்கலியானவர்கண்டுபிடித்தாராம்
பத்தியராமியல்யோகினியாரருள்பார்த்தாரா
மத்திறலோனாயிவர்க்கவரஞ்சியடைந்தாராம். (உஉ)

அன்னவர்தம்மையடுக்கவுமஞ்சியகன்றிங்கே
மன்னவனுக்கதுமைத்துனனோர்சொலவந்தாரா
மென்னையடுத்தறன்முத்தியுமுண்டெனவேகுங்காற்
சொன்னதுகேட்டவர்பெண்டிர்நலங்கடுறந்தாராம். (உங)

நஞ்சினுமிக்ககொடுமைபகையோர்முனலங்குன்றிப
பஞ்சினுமெல்லியலாரையடைந்தவர்பயமுற்றே
ருஞ்சிடுதற்கெதிர்தம*முருவிட்டவருருமாறி
யஞ்சினரிங்கிவர்தங்களொடுஞ்சமரார்செய்வார். (உச)

பதுமன்மகட்கவர்தூதெனவேவுமொர்பைங்கோதைப
பொதுமகளுக்கொருபொதுமகள்விட்டதுபோதாதே
யெதிருறுபுத்தனடற்சமணன்பிறரினையோருங்
கதுமெனவேகவிடுத்ததுநல்லகணக்கன்றோ. (உரு)

ஒன்னலர்வந்தெதிரோங்கினுமாங்கவருடேயிங்
கென்னையாரையழைத்திவைநீக்குதியொன்றேவித்
தன்னகரின்கணிருந்தரசாள்வதுதனைவிட்டித்
தொன்னகரின்கணமமன்னவனெய்துதறொழிலாமோ. (உசா)

இடையுறுதன்றிருநாடும்விடுத்திறையெதிரோவர்
துடையவினத்திலுயர்ந்தவராய்மதியுடையோராய்த்
தடையுறுசெய்வினைதக்கதிதின்னதகாதென்றே
புடையிலிருந்திவர்புத்தியுரைத்ததுபோதாதோ. (உஎ)

என்னவெடுத்திவைசொலவியகாமனையிகன்மன்னன்
றன்னதுகைகொடமைத்தெவர்நிற்பார்தளஞ்சிங்க
மன்னனும்வீரம்வெளிப்படிலென்றுமகங்காரன்
சொன்னவைதன்னியலென்றுமறித்திவைசொல்லுற்றான். (உஅ)

வேறு.

பெண்டிரைத்துணையாய்க்கொண்டுபெருஞ்சமர்கடக்கும்வீரர்
திண்டிறனன்றுமென்றேசெப்பியசெருவிற்காமா
பண்டொருமயிடன்றன்னைத்தாருகப்பதகன்றன்னை
யொண்டிறன்மாதரன்றேசமர்புரிந்துயிருண்டாரோ. (உகூ)

* முதுகிட்டவர்என்றும்பாடம்

ஆதலிற்சம்புபத்தியரிபத்தியென்பார்தம்மை
மாதரொன்றிகழ்வதன்றுன்மற்றவர்கருணைகூரப்
போதுவரொன்னில்வெல்லும்புயவலியில்லாரோனுந்
தீதுறும்பகைஞர்போரிற்சிங்கமொத்தடுவரன்றே. (௰)

அடுத்தநம்பகைஞர்தம்பாலன்னயோகினிகடாமே
யெடுத்தபோன்புசெய்தடுதந்தலத்துள்ளுமுண்டாற்
கடுத்தினியவர்மேல்யாருங்கலந்துடனெழுந்திப்போர்த்
மடுத்திலமென்றுற்பின்னைமுடிபடுவதுவன்மையன்றே. (௧௧)

என்பதனுலும்யாவுமெய்தினுமிவ்வூர்முத்தி
வன்புதநல்குமென்னும்வழக்கதொன்றுண்மையானு
மென்பகைபுகுதாமுன்னேமேவியிந்நகரில்யானே
பின்பனைவோருமிங்குவரச்செய்தபெற்றியாமால். (௧௨)

சிரத்தையைப்பிடிக்கச்சென்றசேயிழைமிச்சாதிட்டி
கரத்துறுகபாலன்புத்தன்கடுந்திறற்சமணனின்னோர்
வரத்தது தாழ்த்ததென்னோதெரிகிலன்மானன்றன்ம
னுரத்திறங்கவரச்சென்றோனுற்றதுமுணர்ந்திலேனல். (௧௩)

போதியநெறியிற்புக்குப்புத்தனேமுதலோர்கண்டு
நீதிமுன்பிறந்தோன்றர்க்கநீலவாள்விழிபாலேவுந்
தூதியைக்கவர்ந்ததாகச்சொற்றனனிடம்பன்மைந்த
னோதியவனையன்வார்த்தையுண்மையாய்யாவர்கொள்வார். (௧௪)

அன்னவளிவருக்கஞ்சியாரிடைக்கரந்துற்றாளோ
வின்னமுமினையர்தேடியெவ்வழிப்படர்கின்றாரோ
பின்னவிர்கூந்தலாளைப்பிடித்திங்குவருகின்றாரோ
முன்னநங்கவியைக்காய்ந்தோர்முனிவிளுலென்னுற்றாரோ. (௧௫)

ஆதலாலறியகிற்பாரிவரவடன்னைப்பற்றிற்
காதலாமியல்விவேகன்கடிமணந்தாழ்க்குமன்றே
மோதலாம்பகையையாவுமுடிக்கலாநமக்குப்பின்ன
ரீதலானுறுதிமற்றொன்றில்லையென்றியம்புமெல்லை. (௧௬)

வயிரவிதன்னையேவிவருமவழிபார்த்துநின்ற
செயிருறுங்கரகபாலன்சிரத்தையோடறனையின்னங்
* கயிரவமனையசெவ்வாய்க்காரிகைகொணர்ந்திடாம
லயர்வுறுகின்றதென்னென்றையுறுமுளத்தனுனன். (௧௭)

* கயிரவம்=செவ்வாம்பல்.

குண்டனைநோக்கியெண்ணிக்குணிக்குநின்கணிதநூலால்
விண்டுரைசெய்தியன்றுண்மேவியவிளைவென்றோத
வொண்டிறலவனுமவ்வாறோர்ந்துதன்னுள்ளத்தூடு
கண்டனன்விளைந்ததெல்லாங்காபாலிதனக்குச்சொன்னான். (௩௮)

அன்னசொற்கேட்டலோடுமாங்கவன்றானுக்கிட்டஞ்சி
பொன்னுடைத்தெய்வமானாளிவ்வணமிறந்தாளென்னிற்
பின்னைமற்றெவரோயந்தப்பெண்கொடியன்புபூண்ட
வொன்னலர்க்கெதிர்போய்வெம்போருடற்றிவெல்பவர்களென்றே

இனியிறைதாழ்ப்பதன்றாலிங்ஙனமெழுந்துபோயா
மனைவருமதிமாமோகனடித்துணைதொழுதுவந்த
வினையிவையாவுமாங்கேவிளம்புதுமென்றுபோனார்
கனல்விழிக்காலனோடுகண்டகர்பிறருமாதோ. (௪௦)

புழுங்குவெங்காலன்குண்டன்புத்தர்கோன்மிச்சாதிட்டி
செழுங்கவினழிந்தமானனனைவருந்திறனழிந்து
மழுங்கிவெம்மாகலிற்றோன்றுமதிநிகர்முகத்தராகி
யழுங்கியசிந்தையோடுமவ்வயின்வரவுகண்டான். (௪௧)

அன்னவர்வரவுதானையரசனோடாங்குளார்க்குச்
சொன்னதுபின்னர்விண்டுசொல்வதற்குற்றதென்ன
மன்னவன்சரணம்வந்துவணங்கினர்நின்றகாலை
கன்னவிற்றிரடோள்வெய்யகாபாலனினையசொன்னான். (௪௨)

ஐயநின்னேவல்கூடியணங்கன்னமிச்சாதிட்டித்
தையறன்னொடியாங்கடனித்தனிநெறியினெய்தித்
துய்யவன்றாதிதன்னைத்தொடர்ந்தனங்கண்ணுற்றெங்கள்
கையுறநின்றவெல்லைக்கரந்தவள்போயினாளால். (௪௩)

ஆனவடன்னைப்பின்னுமனைவருநாடும்போது
மானனுமறனைநாடிவந்தனனவன்றனோடுங்
கானவிர்குழலினாளைக்கணிதமோர்ந்தமணன்சொல்ல
ஞானயோகியர்தஞ்சிந்தைநண்ணுறத்தெரிந்துமன்னோ. (௪௪)

மந்திரசித்தியென்றாய்வயிரவிதன்னையாங்கே
யுந்தினனவளுமவ்வாறுற்றிருவரையும்வவ்வி
யந்தரத்துற்றவேலையரிபத்திவெகுளிதாக்க
விந்திரசித்தின்பாசமிற்றதொத்திறந்துவீழ்ந்தாள். (௪௫)

நற்புலப்படைஞர்தாணடைபெயர்க்கெழுதலா
லுற்பவித்துடலழிந்துலையுமிவ்வுலகர்வா
ழற்புதப்பொய்மைமெய்யாமெனக்கண்டுளார்
புற்புதக்கண்டொறும்பூழிசென்றுற்றதே. (கo)

நன்னிமித்தத்தொடுநாதகீதத்தொடும்
பன்னுமெய்ச்சுருதியின்பல்லியத்தொலியொடுஞ்
சென்னெறிப்புக்கதச்செழுமதிக்கணவனு
ருன்னுற்றதத்தவத்துணர்வுடைத்தேரரோ. (கக)

காசிமாமோக்ஷக்குலநெடுங்காலுறப்
பாசிதொட்டாதுங்கியதெனப்பாறவே
வாசிதேரியானைமாவயவரொடரசனக்
காசிமாநகரிடைக்காதின்வந்தெய்தினன். (கஉ)

ரதமேறியுற்றிகதெண்ணரும்படைஞராம்
விரதமாசமையொடும்வீடுகண்டாலெனச்
சரதமாமறிவுடைத்தலைவனக்ககரிடைப்
பருதிபோலொளியெழும்பண்பொலாநோக்கினன். (கங)

என்றுமாறுதசெய்கதிகொள்வானிரவியுந்
துன்றுதாபக்கொடுந்துயர்தனக்கெய்துமே
வின்றுபோதற்குநிலையெனக்கருதுறச்
சென்றுவானுற்றபொற்கோபுரச்சிகரமும். (கச)

கையெடுத்திலகுநற்காசிமாநகரொனு
மையன்முற்றித்திருத்தன்னுள்வைகினளெனு
மையநற்றெவலாயுயவரவழைத்திடுதல்போற்
றுய்யநற்கொடிநுடங்கியமதிற்சூழலும். (கரு)

விள்ளருமபாமனுமவிண்டுவுங்குடிபுகுந
தள்ளருங்கயிலையருசயிலமுந்தாழ்கடற்
பள்ளமுநதமதருட்டபத்தராயினர்கட
முள்ளமும்பொருவுறுவுபயநற்கோயிலும. (கசா)

கண்டுகண்டனைவருங்கண்களித்தங்கையா
முண்டகந்தந்தமாமுடியினுச்சியின்முகிழ்த்
தண்டருந்தெரிவுருவம்பிகாபதியருட்
கொண்டுவைகியதிருக்கோயிலுட்போயினர். (கஎ)

ஆயபொற்கோயில்புக்கத்தனோடன்னையைச்
சேயவர்க்காயினர்தெரிசனம்பெற்றருட்
டாயனைக்கண்டதன்குழவியுந்தருகொடைத்
தூயனைக்கண்டவாதுலருமாயினர்களால். (கஅ)

இன்புறத்தமதுரோமஞ்சிலிர்த்தெதிர்புகுந்
தன்புறக்கண்கணீரருவிநேர்பெருகுவார்
முன்புறப்படியின்மேன்முடியுறப்பணிகுவார்
வன்புறக்கோயில்சூழ்மதில்வலஞ்சூழுவார். (கக)

சூடுவார்சென்னியிற்றூயதாடொழுதெழுந்
தாடுவார்திருவெழுத்தைந்தையுந்தம்முளே
நாடுவார்சிந்தையுநயனமுங்களிகொளப்
பாடுவார்பண்ணொடைப்பரமஞானியர்களே. (உ0)

அன்னதோர்வேலைவாயறிஞர்தங்கோமகன்
றன்னதாருயிரனார்தம்முன்வர்தெய்திபங்
கென்னையாளுடையவன்றாள்பணிந்திருகாரு
சென்னிமீதிற்குவித்திணையசொறசெப்பினான். (உக)

வேறு

ஏவாதகல்லாலெறிந்தானுமெமமினத்தோர்க்
காவாபெருகவருள்சுரந்தநின்கடைக்கண்
பூவாலெரிந்தான்பொடியாகப்பார்த்ததென்னிற்
றேவாவெவருன்றிருவுளத்தைத்தேர்வாரோ. (உஉ)

சூழப்பணிந்ததிருத்தொண்டர்தமைமேலாக்கி
வாழப்பணித்தமலர்ப்பாதமாமுடியி
லாழப்பருப்பதத்தோடள்ளிச்சுமந்தானைத்
தாழப்பணித்ததெவர்தாமுணரவல்லாரோ. (உங)

வைதிடினுமெம்மினத்தோர்வாய்வாழ்த்தினுமவருக்
கெய்தரியபேறளிக்குமின்பச்சிறுமூர
லுய்தலறமுவினைமூன்றாரோடுநீறுபடச்
செய்ததெனின்மற்றுன்றிருவிளையாட்டாரறிவார். (உச)

நாதாவிக்காசிநகர்நாடிவந்துடைய
மேதாவியர்க்கலதுவீடுபெறற்கெவ்வுயிர்க்கு
மாதாரகப்பிரமமந்திரத்தைமாய்ந்திடும்போ
தோதாதொழியிலுனக்குப்பயமாமோ. (உரு)

நீடரிக்குமிந்நகர்க்குணீடுலகிலெவ்வுயிர்க்குஞ்
சாதல்வரப்பெற்றெவையுந்தன்மயமாகப்பெறுமேல்
வேதனெனச்சென்மம்விதிப்பவர்க்குமாவிகொள்ளும்
பாதகர்க்குமென்னேபணிக்கும்பணிவிடையே. (௨௬)

என்றுபலவாசகங்களிவ்வாறெடுத்துரைத்து
நின்றுருகுங்கோமானைநீலகண்டத்தெம்பெருமான்
பொன்றிகழுங்கொங்கையன்னபூரணியோடும்மகிழ்ந்து
துன்றுதிருநேயஞ்சுரந்ததிருக்கண்சாத்தி. (௨௭)

மோகன்முதலானோர் * முருங்கப்பொருதடக்கி
யேகமுதனைதனிருஞ்சிறைநீர்க்கும்படிக்கும்
பாகனையசொல்லிசிவபத்தியையுங்காப்பாக்கிப்
போகவிடைநல்கும்பொழுதிறைஞ்சிப்போற்றியே. (௨௮)

மன்னுபடைசூழவிந்துமாதவனையும்பணிந்து
தன்னுளமுமெய்யுந்தழலின்மெழுகாயுருகிப்
பன்னுவனதோத்திரங்கள்பண்ணியரிபத்தியொடும்
பொன்னுலவுசெய்யபதம்போற்றிவிடைகொண்டகன்றான்.

கங்காநதியின்கரை ‡ யறிஞன்சென்றணுகி
மங்காதஞானவயப்படைஞர்தற்சூழப்
பொங்காழியோதம்புடைபரந்தாற்போன்மோக
சங்காரஞ்செய்வானத்தானத்துறைவேலை. (௩0)

விவேகன் காசிபுகு சருக்கம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௩௨௨.

---

## ௨௯-வது, படையெழுச்சிச்சருக்கம்.



வேறு.

அன்னவர்வரவுதன்பாலடுத்தவர்புகலக்கேட்டு
மன்னவனெடுமாமோகன்மனங்கொதிகொதிப்பவீரக்
கன்னவிறிரடோள்விம்மக்கட்டுணைசிவப்பக்காந்தித்
தன்னருகிருந்ததானைத்தலைவரோடிதனைச்சொன்னான். (௧)

---

* முருங்கல் - அழிதல். ‡ ஒருபால் - எனவும் பாடம்.

காடுபோய்மறைந்துநம்மாற்கலங்கியவிவேகன்பட்ட
பாடுபோயஞ்சிநின்றபயமும்போய்ப்படைகொண்டாங்கோர்
காடுபோய்வைகிமீண்டிந்நகரினுமபுகுதக்கேட்டு
மூடுபோயடரோமெங்ஙனெதுங்கிப்போயுறைதுமம்மா. (உ)

அடர்ந்திலமனையர்வைகுமவ்வனத்தினுமிந்நாட்டிற்
படர்ந்துவந்திருத்தாரென்றல்பகர்ந்திடக்கேட்டுமாங்கே
தொடர்ந்திலநமமுன்வந்துதூதுசொற்றவன்பின்னேயு
நடந்திலமென்றுவிங்ஙனண்ணுவார்க்கச்சமுண்டோ. (௩)

என்பனபலவுங்கூறிப்பகல்பொறாற்கினியென்மோக
வன்படையெவையுஞ்செல்லமதமெனுமத்தமாவிற்
புன்பழிப்பறைநின்றேங்கப்புடைத்திரொன்றுரைத்துமீட்டுந்
தன்பெரும்விடயத்தேனைத்தருதிரால்விளைவிலென்றான். (௪)

என்றவனுரைத்தலோடுமெழுந்தடற்காமனையா
வுன்றனியாண்மைகாண்பாருலகின்மற்றெவரோயப்பா
னின்றமர்க்களத்தினெய்திநிருபகன்முதலோர்மாளச்
சென்றடியேங்கள்செய்யுஞ்சேவகந்தெரித்தியென்றான். (௫)

வேறு.

ஈதவனுரைத்துடனெழும்பொழுதுவல்லே
மோதியபழிப்பறைமுழக்கினொலிகேளாத்
தீதுறுமருட்படைசிவன்பருகுமுன்னே
யோதவிடமுற்றதெனவோங்கியதுமாதோ. (௬)

செம்பொன்மணிநூபுரமெனும்பறைசிலம்பத்
தம்புருவவில்லொடுதடங்கணிணையம்போ
டம்பொன்முலைமாகளிறுடல்குலிரதத்தோ
டிம்பரினெழுந்ததுமுன்னிரதிபதிதானை. (எ)

சிற்றமதயானைகுடிலப்பரிதிறற்றேர்
சாற்றதிர்மொழிப்பறைபுரூரநிமிர்சாப
மேற்றழல்விழிக்கணைகள்யாவுமெதிர்கொண்டே
யாற்றலொடெழுந்ததகிகோபனதனீகம். (அ)

வாயிதழ்துடித்தலுமடித்தெயிறதுக்கித்
தீயெனவிழிக்கடைசிவத்தலுமடுத்துப்
பாய்புலியெனப்படபடத்தலுமிவ்வாறே
யாயகொடுமைப்படையடர்ந்தனவனந்தம். (௯)

இரப்பொலிகொண்மாமுழவொடேழ்கடல்வளாகப்
பரப்பினுமடர்ந்துபடர்பாய்பரியொடேந்துங்
கரப்பலியுள்வாளொடுகலித்தடலுலோப
னுரப்படையெழுந்ததறிஞோர்கணமொதுங்க. (க0)

ஈட்டுபொருள்யார்வரினுமில்லையெனும்வன்சொற்
காட்டுவதுமற்றொருவர்கைப்பொருள்பெறக்கை
நீட்டுவதுமிவ்வகைநிரந்தரமுமேடா
ராட்டுவதுமாயபடைசென்றனவனேகம். (கக)

செந்திருவுள்ளாதிர்செயிர்த்துடையபார்வைக்
குந்தமுமகத்ததுபொறாதகொலைவாளு
நிந்தைதபிறரைப்பகர்நெடுங்கணையுமேந்தி
வந்ததிகன்மச்சரன்வயப்படையுமாதோ. (கஉ)

நன்குணர்வினெனுமொர்பாசமுடனல்லோர்
முன்குவிவுறாதலகைமுட்கவிகைதன்னோ
டென்கருமமெய்தினுமெவர்க்கும்வணங்காமெய்
வன்கண்மையொடோங்கியதுமானனிமிர்தானை. (கங)

துய்யர்தொழலுந்தொழுதல்சோர்ந்தனையர்மேற்கண்
பையெனவிழித்துடன்முகிழ்த்துமொழிபல்காற்
செய்யவொர்சிரஞ்சிறிதசைத்தனையசெய்யு
மெய்யவினயமாபடையெழுந்ததொரு * வேறாய். (கச)

யாமெமதெனப்பகர்கவண்களுமியாவுந்
தாமுணர்குலப்பவுரிடத்தமொனல்சாற்றுந
தீமழுவுமுற்கொடுநடந்ததுதிரண்டோர்
மாமமதைதநயவன்வன்படையுமன்றே. (கரு)

இத்தகையபின்னருமெழும்படைகள்யாவு
மொய்த்துமுனெழுந்துசெலமோகநெடுமன்னன்
சித்தசன்முதற்றலைவர்சூழவொருதேர்மேற்
கைத்தழலுமுள்ளுறுகடுப்புடனெதிர்ந்தான். (கசு)

ஆயபொழுதங்ஙனமடுத்தகுறியொன்றே
வாய்புனல்வறந்தனர்வயப்படைஞர்திண்டேர்ப்
பாய்பரிகடுங்கினபதாகைமிசையேறிப்
பேய்கணடமாடினகுறைக்கொளிபிடித்தே. (கஎ)

* வெள்ளம் எனவும் பாடம்.

செம்பணையசோரிமழைபெய்தது செழுங்கார்
பைம்பொனெடுமால்வரைசலித்ததுபகற்போ
தும்பர்பலமீனினமுகுத்ததுமிகப்பூ
கம்பம்வரவுற்றதுகலங்கியதுவேலை. (கஅ)

மின்னறவிடுந்திரளிடித்தவிண்மேல்பா
னன்னதிகளிற்புனலடர்ந்ததிமோகன்
மன்னுபுயமாலிகைபுலால்கமழமற்றோர்
துன்னுபுருவத்தொடுதுடித்தவிடத்தோள். (கசு)

இத்தகையதுற்குறிகளெண்ணில்பலவெய்தப்
பித்தரின்மயங்கியவைகண்டுமதிபேறு
துத்தமவிவேகனுயிருண்பனெனவுன்னிச்
சித்தமருடானையொடுதேர்மிசைநடந்தான். (உ0)

வன்பொடிரவிற்பொழுதுமல்கிருளொடோங்கி
நன்பகலினைப்பொரநடப்பதெனவன்றன்
றன்படைகொடெய்தியதுணர்ந்ததறிஞர்தாமு
மன்புடையதம்படைகொடாங்கெதிர்நடந்தார். (உக)

வேறு.

விடயவன்பகைசிதைக்குமொள்வாளொடும்வெறுத்தெவ்
வுடலையுந்தெறுஞ்சினத்தொடுமடங்கையமொருங்கே
கடவுகட்கணையுறுக்கவசத்தொடுங்காமன்
றிடமயர்ந்திடச்சென்றதந்நிருபகன்சேனை. (உஉ)

மூரலென்றமெய்க்கவசமுமெதிரிலாமோன
வீரமும்பகரின்சொலாங்கூரியவேலு
மாரவந்தெதிர்வணங்குறுதனுவுங்கொண்டாங்கே
பாரவெஞ்சினத்தெதிர்புகுந்ததுபொறைப்படையே. (உங)

வன்மையாகியதயிரியத்திகிரியுமனப்பற்
றின்மையாம்விறற்றண்டமுமெவற்றையும்வேண்டா
நன்மையாமுனைக்குந்தமுமுலோபன்மேனடத்துந்
தன்மையாயெழுந்ததுவயிராக்கியத்தானை. (உச)

தாழ்ந்துமேன்மைகொள்பேரிகைவெற்றிவெண்சங்கும்
வாழ்ந்தபோதினுங்கடலெனவொடுங்குமுள்வலியு
மாழ்ந்தநல்லுணர்வாங்குலிசமுங்கொடம்மமதை
சூழ்ந்துகொண்டதாலடக்கர்கோன்பெரும்படைத்தொகுதி. (உரு)

எனையர்வாழ்வையுந்தமதுபோன்மதிப்பதாமெழுவு
மனையர்பாலுறுமன்பெனும்பாசமுமலர்ந்த
வனசமாமுகக்கவிகையுந்தாங்கிமச்சரப்பேர்
தனையடர்ந்ததாலெழுந்துசங்கோடன்மாத்தானை. (உசா)

புடையெழுந்துமெய்ப்புந்தியம்புலனெறிபோகா
தடையவுள்ளுறவடைக்குநற்படைக்கலத்தடல்கொண்
டிடைபுகுந்தகங்காரமுமானமுமென்னும
படையொதுங்கிடப்படர்ந்ததச்சமதமப்பதாதி. (உஎ)

மற்றுமவேறுளமதியுடைப்படைஞரும்வலிந்து
பற்றலாரிவர்க்கிவ்வெனத்தகையபல்படையை
முற்றமோதுதுமென்றவரவர்க்கெதிர்முடுகிச்
சுற்றினாரிணைந்தோள்புடைந்தார்ந்தனர்தொடர்ந்தார். ()

வேதநாயகன்படையுமக்கொடுந்தொழில்வெய்யோன்
றீதருந்தவன்பதாதியுங்கடுஞ்சினந்திருகி
யோதவாரியும்வடவையுமொன்றொடொன்றுடன்று
மோதினாலெனத்தாக்கியதெதிரெதிர்முடுகி. (உகூ)

இருதிறப்படையும்புகுந்திகலுறுமெல்லை
கருநிறப்புனல்வெண்ணிறப்பாலொடுங்கலந்தாங்
கொருநிறத்ததாய்த்தோன்றலாலடுபகையுணர்ந்து
பொருவதெந்நிறமென்றிறைக்கன்பினர்புகன்றார். (௩0)

அன்னவாசகங்கேட்டலுமறிவுடையமலன்
முன்னதாயநம்படையுமம்மோகன்மாப்படையு
மின்னதாமெனப்பகுத்துணர்வுறுங்குறியினியான்
சொன்னவாய்மையிற்றொடர்திரென்றினையனசொன்னான். ()

வேறு.

பாலகன்வருடும்போதுபால்சுரந்துடையகொங்கை
மாலுறமுயங்குங்கேள்வன்வருடுங்கான்மயக்குநீரான்
மேலவாதொழிலுங்கீழோர்செய்கையும்வேறன்றேனுஞ்
சாலவுமனத்தின்பான்மைவேறுறச்சாருமன்றே. (௩௨)

அறிஞருமறிவிலாருமயலுளோரியற்றலாகு
முறுதுயருழப்பாரொத்துமொத்திலரொன்னலார்மேற்
பிறிதுறுமிடர்க்குநோவர்பெருமையோர்மற்றையோர்தம்
வறிதுறுமுடலிற்றாக்கும்வன்றுயர்க்கழிவர்மாதோ. (௩௩)

நெஞ்சகமுருகுந்தன்மைநீடறிவுடையார்க்கன்றி
வஞ்சகர்திறத்துமுண்டாமென்னினுமொவ்வார்மாத
ரஞ்சனவிழியாலுள்ளமறிவிலார்குழைவரீசன்
றஞ்செனுமருட்கணைக்காற்றம்முளங்கரைவர்சான்றோர். (௩௪)

மாசற்றார்செய்யவேண்டுமோதவமியாதுமில்லை
யாசற்றார்செய்வதில்லையாதலாலினியசெய்கை
பேசுற்றபெரியோர்க்கில்லைபிறர்க்குமதிலையென்றாலு
மோசைத்தெண்டிரைசூழ்பாரிலவர்க்கிவரொவ்வாரொவ்வார். ()

பொன்னும்பித்தளையுமொன்றேபோனிறம்பொலியுமேனு
முன்னும்பற்றறுக்குங்கல்லூடுரைக்கும்போதுரைபொறாமற்
றுன்னும்பற்றலர்தம்மீட்டந்தூயநம்மினமொத்தாலும்
பன்னும்பற்பலவாஞ்செய்கைப்பண்புவேறாகுமன்றே. (௩௬)

நீருற்றதகற்றிப்பால்கொளன்னத்தினீர்மைபோலப்
போருற்றபுல்லர்தானையெவற்றையும்புறததிற்றள்ளிச்
சீருற்றநமதுஞானச்சேனையோடொருங்குசென்று
தாருற்றதும்பைசூடிச்சாடுமின்பகையையென்றான். (௩௭)

அவனாத்துரைத்தலோடுமறிவுடைப்படைஞரீட்ட
முவரிமீப்படர்ந்தாலென்னவோரிமையொடுங்காமுன்னந்
தவமுதற்படைகளேந்தித்தழுலெழத்தாக்கித்தாக்கிப்
பவவினைப்பதகர்தானைபதைத்திடப்பாய்ந்ததன்றே. (௩௮)

சாடினரறிஞரன்னார்தகர்த்திடத்தறுகட்டீயோர்
வீடினர்சிலபேர்சாய்ந்துவிழுந்தனர்சிலபேர்பின்னிட்
டோடினர்சிலபேரஞ்சியொளிந்தனர்சிலபேர்கெட்ட
கேடினர்தம்மையாரோகிளத்துதற்குரியரம்மா. (௩௯)

படையெழுச்சிச் சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க௩௬க.

## ௩௦ - வது, காமனுதியர் வதைச்சருக்கம்.

சாய்ந்ததம்படையைநோக்கித்தழலெழவிழித்தகண்ணர்
காய்ந்தவெஞ்சினத்தர்காலன்கணத்தினுங்கொடியர்வெங்கட்
பாந்தணஞ்சனையர்மோகன்படைத்தலைவீரரீன்ற
காந்தகவுழவர்வந்தார்ஞானிலமருளமாதோ. (க)

காமன்செய்விடயானந்தன்கலகன்வெவ்விகற்பனுசன்
மாமதன்பெறுமனத்தன்மச்சரன்மதலைமானப்
பாமரன்சுதனிடம்பன்பாலகன்கலியன்மைந்த
னுமொர்சஞ்சலன்மாதுக்கனக்ரமன்கலக்கனுமேவோன். (உ)

வெஞ்சினப்பரத்துரோகன்வெகுமுகன்விடயசங்க
னெஞ்சலிலனுசாரன்பேரொண்ணிலெண்ணிருவர்தீயோர்
வஞ்சனைத்தேருங்கோபவாசியுமதமாக்குன்று
மஞ்சுற்கடத்தியோங்குமறிஞர்தங்குழுவைச்சூழ்ந்தார். (ந)

துற்குணவயிரவாளுஞ்சுடுசினக்கொடியவேலும்
வற்குணவலியதண்டும்வணங்குமுட்கபடவில்லு
மெற்குணத்தழல்வாயம்புமேந்திவந்தெழுந்துதாக்கிச்
சற்குணப்படைஞர்சாயத்தள்ளியேபுறத்துஞ்சார்ந்தார். (ச)

தேரினுந்தழல்போற்றீங்குசிறந்ததாயிடத்துஞ்செய்வோர்
போரினுண்ணறிவின்மிக்கோர்புகுந்தெதிர்பொருவரோதான்
காரினுங்கரியசிந்தைக்கடியவக்கயவர்வைகு
மூரினும்புகுதாரன்னோர்க்கொதுங்குவதீருமையன்றே. (ரு)

ஊக்கத்தினுயர்ந்தமேலோரொதுங்கிப்பின்வாங்குந்தன்மை
தாக்கற்குத்தகர்பின்வாங்குந்தகையெனக்குறிக்கொள்ளாமே
நூக்கித்தந்தமதுகோட்பானுனிக்கொம்பேறினரன்னோர்தம்
வீக்கத்தைத்திறல்விவேகன்வியன்படைத்தலைவர்கண்டார். (சு)

சுகனிருவிகற்பர்கோமான்சுசனன்சத்தியனியாய
னகமுகன்றவன்சன்மானனவிரோதன்பரோபகாரன்
றிகழ்சமாதானன்றன்மன்றீர்க்காயுவுளக்கெளிந்தோன்
றகவுறுமியமனற்புதயனொடீரெண்மர்சார்ந்தார். (எ)

வந்தனர்விவேகவேந்தைமலரடிவணங்கியைய
நந்தமர்கலியத்தாக்கிடந்தவெம்பகையைமோதி
யந்தரம்புகுத்தற்கெம்பாலளித்தியால்விடையீண்டென்றூர்
தந்தனம்போதிமான்றனைவரதுதலைமேற்கொண்டார். (அ)

வேறு.

விரதமேன்மையானையாகவேதம்வாசியாகநீள்
சரதமாவிமானமாகஞானதத்துவங்களே
யிரதமாகவவரவர்க்கியைக்தவூர்தியேறினூர்
வரதனனமதிவிவேகமன்னனேவும்வயவரே. (க)

விண்டுநாமசம்புநாமவீரவாளுமெய்ப்புலத்
தண்டுமேல்விபூதிகோபிசந்தநாறுகவசமு
மண்டுகேண்மைநல்லொழுக்கமானசங்குமாழியுங்
கொண்டுதீயவஞ்சனைத்தொடர்ந்துவந்துகூடினர். (கO)

அன்னகாலைமோகனேவுமாலகாலமேயெனச்
சொன்னகாமன்மைந்தனுதியோர்மிகச்சுளித்தெழுந்
தின்னகாலமூழிகாலமென்னநல்வினைத்தர்மேற்
பன்னகாதிபர்க்கெதிர்த்தபவனனென்னமோதினர். (கக)

நஞ்சிலங்குநாகமீதுகலுழனண்ணினுறெனச்
செஞ்சரங்கள்குந்தம்வேல்கள்செல்லவீசிவீசியே
வஞ்சரங்கமூடுசோரிவாரிசோரவன்னவர்
நெஞ்சுரங்கழிந்துவீழுநீதியோர்நெருக்கினர். (கஉ)

மீனகேதனன்சுதன்றவன்கைவாளில்வீடினன்
மானனார்குமாரனைச்சன்மானனுவிவாங்கினு
னீனமானமலகன்வந்தெதிர்த்திருந்தனன்சமா
தானனுலொர்நீர்க்கவாயுராசனுவிதள்ளினன். (கங)

துக்கன்மாளவேசுகன்றுணித்தனனியாயனு
லக்ரமன்றுணிந்தனனகந்தெளிந்தவறினுன்
மெய்க்கலக்கன்வீந்தனன்விநோதமற்றவீரனுனை
மைக்கறுப்பினுங்கறுத்தவப்பிரனுவிபோயினன். (கச)

பகர்பரத்துரோகனைபடபோரபகாரனீக்கினன்
புகலசத்தியன்றனுவிபோக்கினன்மெய்வாக்கினன்
றகையனத்தன்வாழ்வையற்புதயனடர்ந்துதாக்கினன்
வெகுமுகத்தனைத்தொடர்ந்தவ்வகமுந்தன்வீட்டினன். ( )

நிருவிகற்பன்வாளியொன்றினெடுவிகற்பனீங்கினு
னருகுடைச்சுசீலனலசுத்தன்விண்ணையண்மினன்
றருமனெற்றிவவ்வினுனெர்சஞ்சலன்றனுயிரொடே
பொருதவெற்றியியமனலவ்விடயசங்கனைபொன்றினன் (கரு)

இனையதன்மையவரவர்க்கியன்றதெவ்வர்தங்களா
லனையவஞ்சரங்கிறந்ததடல்கொள்காமனுதியாம்
புனையலங்கன்மார்பர்கண்டுபுதல்வர்பொன்றினுமெனும்
வினையுணர்ந்துநினைவயர்ந்துவேறுவேறுகூறினர். (கள)

வேறு.

மின்னுபடைக்காமன்விடயானந்தக்குமரன்
றன்னுயிர்வீந்தானெனவேதானிரதியோடயர்ந்தே
மன்னுயிரையெல்லாமயக்கிநின்றுலியான்வாழ்ந்தே
னென்னுயிரோதோற்றேனினிவாழேனிங்கென்றான். (கஅ)

கன்னேருங்கோபன்கலகனிறந்தானனவே
பொன்னேயென்கண்மணியேயென்றரற்றிப்போயினநின்
பின்னேதொடர்ந்தேன்பிழையென்பிழைத்தாலு
மென்னேயினியிங்கிருந்துபயனயானென்றான். (ககூ)

பொய்யானமைந்தனுயிர்போனதெனவேபொருமி
நெய்யாரழலைநந்தன்னெஞ்சமிகக்காந்தி
யுய்யாளென்வருசனையுமியானுமினியுய்யேனு
லையாவசத்தியனேயென்றிடமபனல்லனுற்றான். (உ௦)

மைத்தடங்கட்டேவிமீறந்தியொடுமாமதனு
மெய்த்தனையனுமனத்தருசனுமெய்வீந்தமையாற்
பித்தனையுந்தம்மைப்பெருவிலங்குதளிவிட்டுக்
கைத்தளையுமிட்டதுபோனினைறுகண்ணீர்கான்றழுதான். (உக)

அஞ்சாவயிரன்மகனக்கிரமனக்களத்திற்
றுஞ்சாமுனமசுமையைத்தோகையொடுமெச்சரன்று
னஞ்சானதுகழன்றநாகமெனச்சோகமுற்று
மஞ்சாமகன்மகனேயென்றுமனநதளர்ந்தான். (உஉ)

சங்கற்பனுந்தனதுதாரமெனவேயுடைய
வெங்கற்பனையுமவிகற்பன்வெருமுகனு
டங்கப்பநிகளத்திலாவிபிரிந்தாரெனவே
துங்கப்பணையிழந்தநச்சுமரத்துண்டொத்தார். (உங)

கள்ளார்கபடக்கலிகாலன் சஞ்சலவென்
பிள்ளாயிறந்தெளியேன்பேரனெனுந்துக்கனொடு
முள்ளார்செறிவகன்றமுங்கிலெனவாக்கினையன்
றுள்ளாவிசோர்ந்தாங்குணமறந்துவெய்துயிர்த்தான். (உச)

வீரசிங்கமன்னவிடயசங்கன்மாளவரு
சாரனங்ககீர்த்தியென்னுந்தாரமொடுந்தானயர்ந்து
கூரழிந்தவேல்போற்குணமழிந்தவன்சிலைபோற்
சீரழிந்துநெஞ்சந்தியங்கிப்பரதவித்தான். (உரு)

பாலகனுமங்கோர்பரத்துரோகன்கொடிய
காலன்வசமானதனுற்காபாலியுட்கலங்கி
மூலமுறப்புச்சமுறிந்தகருந்தேட்போலச்
சாலவுமெய்வெம்பித்தனாமேற்புரண்டழுதான். (உசா)

இத்தகையபள்ளியெவருமியன்மாதரொடு
தத்தமகற்குத்தனித்தனியேதாமிரங்கு
மத்துயரமெல்லாமசஙகாரனேக்கியவர்
சித்தமுறவாய்மொழியாற்றேற்றுவானீதுரைத்தான்." (உஎ)

மக்கட்டுணையிழந்துவன்பினர்போலியாமெவரும்
புக்கத்தலையிற்பொருதுபகைபோக்காமற்
பக்கத்தவர்நகைக்கபபார்மேல்விழுந்தரற்றித்
துக்கத்தடங்கடலுட்சோருவதோவீரமென்றான். (உஅ)

ஆங்காரனீதுரைக்குமவ்வேலையநுகணைப்
பூங்காமன்முன்னமபொருபடைஞுமொல்லோரு
மேங்காமற்றுக்கனிறந்ததுண்மையாக்கியுயிர்
நீங்காதகோபனைத்தன்னெஞ்சகத்திற்கொண்டெழுந்தார். (உகூ)

வேறு.

காய்ந்தழல்கொதிக்குயகண்ணர்கனைகழற்காலர்மோக
வேந்தனையிறைஞ்சியீதிவிடையெமக்குரியமைந்தர்
சாந்தொழிற்புரிந்தோர்முன்னுந்தரியலரொவருழின்னே
மாய்ந்திடப்பொருதுமற்றெம்மனச்சினமுடித்தற்கென்றார். (நூ0)

என்றவரிவைசொலாமுன்னெதிரொருவிடயந்தேர்மே
னின்றவனிரங்கியந்தோநீர்பெற்றபுதல்வரியாரும்
பொன்றினர்கொல்லோவென்னப்பொருமிநெட்டுயிர்ப்புவீங்க
வன்றிறற்படைஞர்தம்மைநோக்கியிமாற்றஞ்சொன்னான். (நூக)

ஞானமெய்ப்படைஞர்தாக்கமதுடைபபடைஞர்சாய்ந்து
போனவப்பொழுதுநீரோபுகுந்துபோர்புரியாதுஙகண்
மானவப்புதல்வர்தம்மைமடிவுறப்புகுத்திப்புத்தி
யீனர்மற்றிவரொன்றேறுதுமியல்பினைப்புதுக்கினீரால். (நூஉ)

இனியவையெண்ணியென்னேயிப்புறமேனுந்தெவ்வ
ரனைவருமாளத்தாக்கியடுசமர்க்களத்தில்வாகை
புனைவுறப்பெறுதிராகிற்புன்பழிதுடைத்துப்பின்னு
மனைவியர்தம்பாலெய்திமக்களும்பெறுதற்காமால். (நூநூ)

என்பவுபுகன்றியாருமேகுமினின்னேயன்னுர்
வன்பகைதெறுதற்கென்னுமன்னவன் விடுத்தலோடுந்
தன்பதமவணங்கிக்காமன்றழல்விழிக்கோபன்முன்னும்
புன்புலப்படைஞராங்குபொருக்கெனவெழுந்துபோனர். (௩௪)

வேறு

தொட்டமலரைங்கணைகருப்புவில்லிடைபலசுருப்புநெடுநா
ணிட்டுநிறைகுங்குமநறுங்கவசமவிக்கிமுதுகின்கண்விசிகப்
புட்டிலுமருங்கிலுடைவாளுமொருதாளின்மிசைபொங்குகழலுங்
கட்டியரணைப்பொராமெவழுந்துமுனைடந்தமைகடுக்குமெனவே. ()

காரிருணெடுங்களிற்றிழைத்துயிலெனுங்கொடியகாளமதிரப்
பேருமகரத்துவசமுனபுசெலமின்பொருவுபெண்படையொடே
வாரிமுரசோலிடமறிக்குடைநிழற்றமலையானிலமெனுந்
தேரின்மிசைமாரனினிதேறினன்வசந்தனெடுதேவியொடுமே. ()

வேள்வினைவினிவ்வணமெழுந்தமைபுணர்ந்துநலவிசாரமெனலாம்
வாள்வலியொடுமமனைவிமுத்தியொடுஞானகவசத்தொடுமின்னுர்
கோள்வினைதெறுதவிரியபடையொடுமவிடயகோபமிகவே
நீள்விரதமாமிரதமேலெதிர்நடந்தனனிருபகணமோ. (௩௭)

மன்னுபுருவச்சிலைகுனித்துவிழிகக்குபொறிவார்கணைவடித்,
துன்னுமதியுட்கொடுகொதித்தெயிறதுக்கலெனுமோர்முரசெழத்
துன்னுவெயர்மெய்க்கவசமிட்டமுன்மெரிழிச்சுரிகைதொட்டுநெடு
மூச், சென்னுமிரதத்தின்மிசையிருஞ்சையொடுகோபனெதிரேறிவ
ரவே. (௩௮)

கண்டவனெடுமபகையெனும்பொறையெனத்தகையகாளம
வுனத், தண்டுமமுதூறுமொழியமபுமெய்வணக்கெனுமொர்சாப
முமுக, முண்டகமலர்ச்சியெனுமோர்குடையுமூறலெனுமொய்க்கசு
வசமுங், கொண்டுமெரியாதையொடுமேறினன்மெய்ஞ்ஞானமதகு
ஞசரமமோ. (௩௯)

மொய்திகழிடமபனெடுவெஞ்சனையுமோர்புடையின்மொய்த்து
வரவே, மெய்தளரினுங்கதிகொடாள்வலியொடின்னுயிர்விடுக்கினு
ம்விடாக், கைதிகழ்பொருட்கதையொடாவலமையாவிதயகட்க
மொடுவர், தெய்தினன்முன்வாணிமவிமானமிசைலோபனவனிச்
சையொடுமே. (௪0)

அன்னதிறல்வெம்பகைஞரெய்தியதுணர்ந்தபிர்தசீலனுமவன், றன்னருகசோரனுமடுக்கவயிராக்கியமதாசலமிசைப், பன்னுபொருள்யாவையும்வெறுக்கைமுனைவேல்விரதபாசமிவைகொண், டின்னகைவிரத்தியுநிராகனுமடர்த்தெதிரொழுந்தணுகினர். (சக)

பூமிசைதனக்கெதிரியில்லையெனலாம்விருதுபொங்குலகரிச், சாமரமிரட்டமருண்மைக்குடைநிழற்றவெவர்தமமொடுநெடுந், தீமைசெய்செருக்கெனுமடற்படைகள்கைக்கொடொருதேவியெனலா, மாமறதியோடுமிறுமாப்பெனுமிபத்தின்மதன்வாதனனரோ.

விந்தகிரியுங்கடலுமென்னமதவீரனெழுமவேலைமலையத் தந்தணமெனழுந்தமெனவன்பொறைபொருந்திறலடக்கர்பெருமான முந்துணர்வுமவாய்மையுமொழுக்கமுமவணக்கமுமுரட்படைகளா யுந்தவெதிரேகினணிறைந்தமுதுகல்வியெனுமோர்களிறரோ. ()

உய்வழிவிடுத்தலெனும்வாம்பரியின்மச்சரனகூயையுடனே, வெவ்வியலெனும்படைகொடெய்தியதுணர்ந்தனையர் வெமபகைஞராஞ், செவ்வியமகிழ்ச்சியுமருளனுமுள்ளன்புறுவல்செனுசொனுமெனு, வவ்வியமுனைபபடைகொடேறினர்களங்கமின்மனத்துரகமே. (சச)

புந்திதெரியாமையிபமாய்மமதையுங்கவுடபூபதியுமே ருந்தியெதிரின்மைபுகலோதையெனுமாயுதமொடோங்கியெதிரே வந்திடுதல்கண்டுசமனுநனதுசாந்தியுமதிநிதிகிரிகொண் டிந்தியமெனுங்குவடிடிக்குமியலாகுமிபமேறினர்களால். (சரு)

நித்திரைமிகுத்தலெனுமாமகனோர்பக்கமவரேயமிகுதன் பத்தினியொர்சோம்பியொடுதாமதனெடுந்திசைபடர்ந்தடரவே சித்தமகிழ்ராசதன்முயற்சியொடவன்பெருசிரத்தையொடுநிள் புத்திரனுடனர்மதியாமிரதமேலெதிர்புகுந்தணுகினர். (சசா)

அன்னவரமர்க்கெதிரடுத்தமையுணர்ந்துமகனுகுமறனு [ந மூன்னரியதேவியொடுளன்பெனுமிபத்தின்வரவொண்புனிதையா தன்னரிவைதன்புதல்வியாகியசிரத்தையொடுசத்துவபிரான் மன்னுதவயோகியர்மனோரதமிசைக்கடிதின்வந்தனனரோ. (சஎ)

ஏசவருகற்பனைமருளனெரிதீயெனவெழுந்ததுணரா வீசவருதண்புனலெனக்கடுகினனிருவிகற்பர்பெருமான் பூசலினெழுந்தொருசந்தேகன்வருகின்றமைபொருமவிபமேற் கேசரியெழுந்ததெனநிச்சயன்வெகுண்டெதிர்கிளர்ந்தணுகினன்.

வெங்கதியனுங்கபடியுஞ்சுதனதன்மனும்விரைந்தெதிரவே
தங்கியசுசீலனுமயித்திரியுமோங்கிவளர்தன்மனுமிசைந்
தங்கெதிரொழுந்தனர்மெய்வேதநெறிநீக்குமுலகாயிதன்முதற்
பொங்குமதவாதியர்முன்வந்தனர்நமவைதிகபுராதனருமே. (சகூ)

வேறு.

மண்டுபோர்வயவரிருதிறப்படையின்மற்றுளோருமெதிர்பற்றியே, யண்டுமேவலர்களவாவர்க்கெதிரியாயினொரொவரவரமுன், ரெண்டராதலமொருக்குதற்குநிமிருழிவெங்கனலுமுடனெழுஞ், சண்டமாருதமுமொன்றொடொன்றிகல்தருக்கினுலெனநெருக்கினர். (ருo)

ஞானசூரருமஞானவீரருமின்னமுதுநருசுமெனநண்ணியே, யானையோடுபொரவானையுந்தியுமவ்விரதமோடூரதமேவியுந், தானையோடிகல்செய்தானைமுட்டியுநல்லிவுளியோடிவுளிதாக்கியுஞ், சோனைமாரியெனவம்பும்வவுமெதிரெதிர்துரந்துமடுதொழில்செய்தார். (ருக)

பண்டிராமகவிசேனைமேலடலிராவணன்றனதுபடைஞர்தாம, விண்டுபோர்செய்ததுமறுமுகக்கடவுள்விபுதசேனையொடுமெவெய்யசூர், மண்டுபோரவுணரிகல்புரிந்ததுவுமற்றுளோர்சமர்மலைந்தது, முண்டுபூருவமவ்விணைஞர்செய்தசெருவினையர்செய்தசெருவொக்குமோ. (ருஉ)

மோகன்வன்படைஞர்காமஞரதியர்முனிந்தெதழுந்துவிரகானலச்
சோகவன்படைமுதற்படைக்கலமியாவுமங்கெதிர்துரந்துமா
சாகசங்கடபலசெய்துமப்படையவர்க்கிழைத்திலதளர்ச்சிவான்
மேகபந்திசொரிதாரைமாரிபெருவெற்பினுக்கிடர்விளைக்குமோ.

தூமதிப்படைஞர்கடவுயுத்தியெனுமம்புவந்துடல்துளைத்துமே[ப்
பாமரப்படைஞர்வெருவலுற்றிலர்படைத்தவாழ்வொடுயிர்பற்றற
பூமியிற்பலரிறந்துபட்டதெதிர்கண்டிருந்துமெவர்பொன்றினுந்
தாமிறப்பதிலராய்மதிப்பவர்தமக்குமச்சமதுசாருமோ. (ருச)

அறிவிலன்படைஞரச்சமுற்றிலருட்படைக்கெனினுமனையர்தாம், பெறுவதென்கொல்விறல்வாளரிக்குலமடுத்தபோதிலிடைபோகிலா, முறுகுவெஞ்சினமதாசலம்பயம்விடுப்பினுந்தனதுமுரணழிந், திறுவதின்றியிகல்வென்றதுண்டெனவிசைத்தல்காதையினுமில்லையால். (ருரு)

ஆயகாலையில்விவேகனேவலினடுத்தபோர்வயவரனைவரு, நேய மாகிமணிமந்திரத்தினும்வசப்படாவரவைநேர்தொடர்ந்,தேயகாள விடமூறுமுள்ளெயிறுகுத்துளாரொனவெழுந்துபோய்த், தீயமேவலர்செருக்கழிந்திடநெருக்கிவெம்படைகள்சிந்தினர். (ருசு)

வேதவாளுமுயர்விரதாபாசமும்விழிப்பெருங்கருணைவேலுமெய்ப், போதநீள்கதையுமின்சொலம்புமகிழ்புந்தியாநெடியகுந்தமுங், கோதிலாதவயிராக்கியத்திறல்கொள்குலிசமுங்கொடுயிர்குலையவே,தீதிலாவயவர்வீசவீசமருள்சிந்தைவெம்படைஞர்சிதறினர்.

உருவிலன்படைஞர்நிலைகுலைந்தனர்குரோதர்சாய்ந்தனருலோபருஞ், செருவிகந்தனர்மதத்தர்மட்கினர்தியங்கிமச்சரர்மெய்சிந்தினர், மருவுறுங்கவுடர்வாய்புலர்ந்தனர்வெம்மானருந்திசைமலங்கினர், பொருகளந்தனிலிராசதத்தொடுதாமதத்தருயிர்பொன்றினர். (ருஅ)

போரிலிற்றவர்கள்போகமற்றவர்புறந்திலோடியதுமறிஞராம்
வீரவித்தகர்தொடர்ந்துவந்தமையுநோக்கிநாணினையும்வீக்கியே
மாரனிக்குவில்வளைத்தலர்க்கணைவடித்துமாமலையமாருதத்
தேரினைத்தருணமாதர்தானையொடுதிமிரமாவொடுசெலுத்தியே. ()

போதகஞ்சுகர்தம்நெஞ்சகத்தினுமுரத்தினுந்திரள்புயத்தினுங்
காதடர்ந்துபொருகணைகளாயபலகணைதொடுத்துமெதிர்காமவேள்
சூதபங்கயமசோகமுல்லைநறுநீலவாளிகடுரந்துமே
மாதர்தங்களொடுதானுமங்கெதிர்மலைந்ததார்புகலவல்லரோ. (சுo)

கற்றடங்கியமெய்ஞ்ஞானபோதனர்கள்காயமேன்மகளிர்கண் களாம், வெற்றியங்கணைகள்கோடிகோடியெதிர்விட்டபோதினும் விகாரமாம், பற்றடைந்திலதனங்களங்கணைகள்பாய்ந்தபோதுமவைபாறைமே, லெற்றிடுந்தறியெனுமுறிந்ததிடர்செய்ததெள்ளளவுமில்லையே. (சுக)

ஆயகாலைநிருபகனுமுத்தியொடடுத்ததேரினையராவெனக்
காயுமாரனிரதத்தினுக்கெதிர்கடாவியேவுபலகடிமலர்த்
தீயவாளிகளெவற்றையுந்தனதுசெங்கைவாள்கொடுசிதைத்துமுன்
மேயமாமகரகேதனத்தையும்விழத்துணித்தனனவ்வேலைவாய். ()

வேறு.

கருகிருளிற்றனியிடத்திற்களவாகியிளநலமுங்கவினுமன்பு, மருவுமயலான்மனைவி வலியவந்து சருவுதலாம்வாளியொன்றை,

யிரதிபநொடுத்தவன்மேலேவினனக்கணையையவாவின்மையென் னுஞ், சரமதொன்றுலகற்றியுத்திதன்கணவன்பின்னுமின்னதன் மைசெய்தான். (கூரு)

வேறு.

நொய்யமாதருடல்பைமறித்தனையநோக்கமாகுமயிருக்கியே நையநூறுபொடியாக்கினனையதன்மைகண்டிரதிநாதனும், வெய்யவாளிகளனந்தகோடியவன்மேலழன்றெதிர்விடத்தொடுந், தெய்யவேழவிலொடிந்ததெண்ணிலவையெண்ணிறந்தசதகோடியே.

செய்தவத்தொருவனைத்தொடர்ந்துபலதீங்கிழைக்குமொரு சிறியன்வாய், வைதிளைத்தவியனிருபகணைமாரணிக்குவில்வ ளைத்ததன், கைதளர்ச்சியுறவிழிசிவப்பவழல்காந்துமெண்ணரியக ணைதொடுத், தெய்திளைத்துமிடர்செய்ததில்லையெனிலென்செய் வானவனொரேழையே. (கூ௫)

இன்னதன்மையிகல்செய்திடும்பொழுதிமைக்குமுன்னமழ லெழவிழித், துன்னருஞ்சிவனெரித்துவிட்டகுறையுள்ளதுங்கெ டவுமுத்தியாந், தன்னணங்கிரதிமாதைவெல்லவெதிர்தானுமவ்விர திதலைவனைச், சின்னபின்னமுறவாய்ந்துதேர்ந்தலெனும்வாளியொ ன்றிலுயிர்சிந்தினன். (கூகூ)

பஞ்சபாணனுயிர்மாய்ந்தபின்னரடுகோபன்மெய்பதைபதைத் துநீ, டிஞ்சையாமவளைகட்டுயிர்ப்பிரதமீண்டுநீகடிதுதூண்டெ ன, நஞ்சுபோன்மனமழன்றினிப்பொறையனுமமாய்ப்பனெனஎண் ணியே, வெஞ்சொலாகியகவண்கன்மாரியொருகோடிகோடியெதிர் வீசினன். (கூஎ)

மோனமாகுமொருகேடகங்கொடவையாவுநீறுபடமோதின ன், ஞானதீரனதுகண்டகோபனிருநாலுதிக்கையுநடுக்கியே, கூன ல்வார்புருவவிற்குனித்துவிழிகக்கனற்கணைகுளிர்ந்தபொன், மே னியான் முன்விடுபோதவற்றையுமொரின்சொல்வாள்கொடுவிலக் கினன். (கூஅ)

ஊக்கியேவியவிழிக்கனற்கணையுகுத்தபின்னுருமிடித்தெனத் தாக்கினனொருதடக்கையாலதுசகித்தமெய்ப்பொறுமைதானுமே காக்கொணுதசிறுமுரலென்றுபகர்கடியவேலெதிர்கடாவியே நீக்கினனெடியகோபனுவியைவிழுந்ததங்கமுநிலத்தரோ. (கூக)

வெய்யமாமகிணனங்கிறந்தபடிநோக்கியிருசையெழு,மின்னஞு, ளையகோவெனவிழுந்தரற்றியவளாவிநீக்கினணிராகன்மே, லெய்யலோபனவனுள்ளமாறுபடநூக்குவன்னெனநுவன்றுதன், வையல்வாஞ்சைவிடுத்தோர்முடுக்கிமிகுசாகசங்களிவைதான்செய்தான்.

வேறு

உறுபெருளொன்றின்மையனுமவறியனிவனென்பதுதன்னுள்ளத்துன்னிச், சிறுவிலைநாளுசுவையோடன்பிலனாட்டடிசிலெனுந்தீயவேலை,முறுகியவெஞ்சினலோபன்விடுத்திடைதந்நடுத்தியெனமுடுக்கலோடு, மறுவிலனென்படினுமவ்வாண்மறுப்பெனுமோர்திறற்படையான்மாற்றிவீழ்த்தான். (எக)

இழிகுலத்தோர்கொடுந்தொழிலாலீட்டுபெரும்பொருளினைத்துமினியநலனிற், பொழிதருமதானமென்னுங்கடுங்கணையொன்றினைலோபனபோரிற்றுக்கி, யழிவுறச்செய்குவனிதினுன்றவியெனவேவுதலுமதைவிராகன், விழுமியபொன்னினுமவர்பாலிரவாமைவிசிகமொன்றால்விளியச்செய்தான். (எஉ)

மூண்டாசைவரப்புகுந்தன்மனையாள்விழைபொருளாமுடிவில்வாளி, தூண்டாநின்றனன்விளாவினவற்றையுந்தன்னியற்படையாற்றுணித்தியாவும், வேண்டாமையெனுஞ்சுடர்வேலொன்றுவயிராக்கியர்கோன்விடுத்தலோடு, மாண்டானக்கடுலோபனிச்சையுந்தன்மகிழ்நனொடுமடிந்துசாய்ந்தாள். (எங)

ஆங்காரன்றிறங்கெடுத்தான்சமன்சாந்தியகந்தையுயிரழித்தாளாவி, போங்காலமடக்கர்பிரான்மதன்மறதியிருவருக்கும்புகுதச்செய்தான், வாங்காதமச்சரனைமாய்வித்தான்சந்தோடனமகிழ்ச்சியென்னப், பாங்காகுமவன்றேவியசூயைதன்னையுயிர்பறித்துப்படியில்வீழ்த்தாள். (எச)

வஞ்சனையையாவியுண்டானத்தேயன்மிகத்தெளிந்தமதியோன்றனனு, னஞ்சலையதிறலிடம்பனுயிர்துறந்தானிலச்சையொடுநடந்துமானன், றுஞ்சினன்றுந்தியுந்தமனுந்தொடர்ந்தமையாற்சந்தேகன்சுழல்காற்றின்கட், பஞ்சனவிற்பாய்ந்ததெனநிச்சயனலசித்தியொடுபடியிற்சாய்ந்தான். (எரு)

கற்பனையையவள்புணர்சங்கற்பனையோர்நிருவிகற்பக்காளைமாய்த்தான், வெற்பனையராசதனுந்தாமதனுஞ்சத்துவனால்விளிந்

தாரணி, னற்புதல்விசிரத்தைசென்றுநவிலிருவர்சிரத்தையர்தங் நாமந்தீர்த்தாள், சொற்பனஞ்சேர்நித்திராயைச்சோம்பியொடும் புணிதைசென்றுசோர்வித்தாளால். (எசு)

காரியனைவிரத்திகொன்றுளவள்கணவன்முயற்சியுயிர்கடிந்தான்சுத்த, வீரியனுனசுசீலன்கலியைவென்றுமயித்திரியாமின்னுலன்னுன், பாரியையுமுயிர்பறித்தான்றருமனுலதன்மனுமேபட்டான்செங்கைக், கூரியதன்னியல்வாள்கொண்டடன்மோனன்பொருகளத்திற்குதர்க்கன்மாண்டான். (எஎ)

தீவினையையுவீரோதன்றிருத்தேவிமுதிதைசென்றுசெகுத்தாள்வெம்போர், மாவினைசெய்விபரீதபாவனையுமோரசம்பாவனையுமென்னும், பாவியரைத்தாரணன்றியானனெடுமேபோய்வதைத்தான்பகரனீதி, தாவியெழுங்கருணைபொரத்தான்முடிந்தாடவன்பொரத்துற்சபதன்வீந்தான். (எஅ)

அப்பிரமன்விப்பிரமைமயாவிசெற்றுனத்திகனுரங்கைவாளாற், செப்பரியமிச்சாதிட்டியுமிறந்தாளித்தகையதீயோர்யாருந், தப்பறவெஞ்சமர்க்களத்திற்சாய்ந்தவெல்லை வைதிகர்மேற்றழல்போற்காநதி, வெப்புருவுகொண்டனையசார்வாகன்முதலோர்போர்விளைப்பதானுர். (எகூ)

காமனுதியர்வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசசo.

---

## ருக - வது, உலகாயிதன்வதைச்சருக்கம்.



முறைகோடியுலகாளுமோகனடிப்பணிபுரியுமூர்க்கர்தம்முண், மறைகோடிபுகன்றுலுமற்றவைக்குப்புறம்பாகுமதமேற்கொண்டு, பறைகோடிகலிப்பவிவேகன்படையுட்கொடும்புலிபோற்பாயாநின்ற, நிறைகோடியவருளுலகாயிதனென்றொருகொடியோனெறியொன்றில்லான். (க)

மின்னுகத்தினைநீங்கிமேதினியில்வந்ததுபோல்விளங்குமாதர்,
பொன்னுகத்திளமுலையின்போகநுகராதவமேபொழுதுபோக்கி
யென்னுகத்தவமுயல்வீரோழைகாளெனவுல்கையிகழுமாற்ற [ன்.
முன்னுகப்பின்னடந்துவாதநெடுஞ்சமர்க்களத்தைமுனிவோடுற்று.

உற்றுவிவேகன்படையையொருங்குடன்பார்த்தப்படையினூ டுபுக்குச், சிற்றறிவாமதயானைதார்க்கிகர்கோனெதிர்நடத்தித்தெ ளிவொன்றில்லார், சொற்றருநூற்சிலைவளைத்துச் சுடுதொழிலுவா கொழுவிமையற்சொல்லாம்வெயய, வற்றமில்வார்கணைதெரிந்து தொடுத்துவிடுத்தடுத்திகலிப்படுபோர்செய்வான். (ந)

விஞ்சுபலநலைதெரிந்துவேதமுடன்வேதாங்கமெய்ம்மைநாடி ச், செஞ்சவுணர்தார்க்கிகர்கோன்றிண்புயம்பூரித்துயர்ந்தசெவ்வி நோக்கி, நெஞ்சுபறையறையினுநேர்நின்றுசமர்விளைப்பனெனநெ றியிலாத, வஞ்சவினைபுரியுமவன்வெஞ்சின * வஞ்சினமினையவகு த்தல்செய்வான். (ச)

தண்பட்டநதிவிடுத்துநீர்வேட்கைகானலினுற்றணிப்பார்போ லப், பண்பட்டமொழிமடவார்நலந்துறந்துமாய்ந்துமுத்திப்பயன் கொண்மாந்தர், விண்பட்டவுருமனையவிதண்டாவாதிகளினுல்வெ தும்பினாளும், புண்பட்டசெவிகுளிரமோகனுங்கேட்டகமகிழப்புக ல்வதானன். (ரு)

வேறு.

மூண்டமனமாதியிருமூன்றுபொறியாலுங்
காண்டகையகாட்சிபிரமாணமதுவின்றி
யீண்டுமநுமானமுபமானமுதலியாவும்
வேண்டுகிலம்வேண்டுமெவர்மெய்யுணர்விலாரே. (சா)

அவ்வளவைகொண்டினிதளந்தறிவதார்க்குஞ்
செவ்விதினுரைப்பினெறிசேர்ந்துவருபூத
மெவ்வியல்பதென்றிடியியற்கடினசீதம்
வெவ்வியல்புடன்சலனம்வேறுபெறுமாறே. (எ)

தந்தபெயராமவைதலம்புனல்கனற்கால்
கந்தமிரதம்முருவுகாண்டகையவூறு
வந்தகுணநித்தமிவைவாய்ந்திடுபுணர்ப்பு
மிந்தவுலகத்தியலியற்கையெனலாமால். (அ)

அந்தமிலணுக்கள்பலவாமுறுபுணர்ப்பின்
மைந்துறுகடாதிபலமண்ணில்வருமாபோற்
புந்திகுணம்வண்பொறிபுலன்களுமவற்றி
னுந்தியெழும்வாரியினுறுங்குமிழியொத்தே. (கூ)

---

* வஞ்சினம் - சபதம்.

உற்றதினோர்பூதமொழியப்புலனெடுங்கு
மற்றுளசராசரமுமன்னுமவையேபோற்
கற்றவகலநதுசெறிகாரியமுலந்தா
லற்றமிலவாயவையுமாதியிலடங்கும். (க0)

இன்னவகைபேசுசபதத்தினையிகழ்ந்தே
பின்னவகைசெய்கைஞர்பேரணிநடுங்க
வன்னவனுள்ளேகமெனுமப்படைதொகுத்து
மன்னுமடல்வாகைகொளவாளமர்விளைப்பான். (கக)

வேறு.

யாணித்தகையானுரைசெய்தவிச்சூளுறவுக்கெதிராக
வூனைத்தருமோர்வினையான்மாவூட்டுமிறைமற்றுண்டென்றல்
கானிற்பயிலுமுயற்கோட்டிற்கால்வைந்தேறிவந்திங்கள்
வானத்தலர்ந்தவரவிந்தவாசநுகர்ந்தவ்வையாமால். (கஉ)

செய்தகருமஞ்செய்தோரைச்சென்றேதொடருமெனிலிங்கே
வெய்தினிறந்துவிடிற்றொடருமிதமென்றாலவினைகெடினு
நொய்தினெடுங்கிச்சூக்கமுறநுடங்கித்தீபமடங்கியிடி
னெய்துமொளிமற்றெங்குண்டாமிதற்குத்தரநீயிசைப்பாயே. ()

மாண்டபின்னர்வயவிட்டவையுநதழையும்பலிப்பதுபோ
லீண்டுகன்மங்கெட்டெய்துமெனிலிட்டிடத்திலெய்துவதா
மூண்டபசியின்வநதோரைமுறையாலுண்ணப்பண்ணுஞ்சோ
றுண்டுவயிற்றினிடையற்றலங்கப்பலன்கொள்வதற்குற்றாய். ()

மதியுமுருவுமொவ்வாதவகைகன்மத்தாலெனில்விரல்க
ளதிகங்குறைவுதத்தம்முள்ளாதலெந்தக்கருமத்தால்
விதியுண்டென்னிலுரைபூதமிகுதிக்குறைவேயதுதானுங்
கதியுண்டென்றவிம்மைநலங்கைவிட்டவமேகழிகின்றாய். (கரு)

எண்ணந்தருமின்பொடுதுன்புமெய்தல்கன்மத்தாலென்னிற்
றண்ணம்புனல்சந்தனமாதிசாரச்சாரவழல்சார
நண்ணுஞ்சருமாதிகடீர்நணுகிச்சுருண்டுகுழைவெய்தப்
பண்ணுங்கன்மமெவையவையும்பகரிற்பொருளின்பண்பாமால். ()

உடலின்குணமற்றல்லாமலுண்டோரான்மாவேறென்னிற்
குடலின்புரையுட்புக்கதுவோகூறாய்பொறியோராறுலுந்
தொடர்கிற்பதுவன்றென்பாயேற்றுறைசேராமையிரினுக்கு
மடர்வெங்கானின்முயல்வெங்கோடதற்குமளவோதுதலாமே.

அருவமிறைமற்றுமாகிலாகாயம்போலறிவின்று
முருவமென்னிற்பூதத்தினுற்றபுணர்ப்பின்றென்றுரு
மிருவேறியல்புமுளதென்னிலிமயப்பொருப்பையெடுத்தேந்தித்
தெருவில்விசும்புசென்றதெனசசெப்புமுறைமற்றெப்பாமே. ()

அன்னம்பூதத்தேயாகுமதனாலுடலம்புத்திமனம்
பின்னம்பின்னமாய்த்தோன்றும்பேதாயிரதப்பெற்றியெல்லா
முன்னஞ்சுருதிமொழிந்திடவுமூர்க்கராகியுலகத்தோ
ரின்னந்தெளியாதலைகின்றானென்னேயென்னேயிதுவம்மா. (௧௯)

வேறு.

நறும்புனல்வெள்ளத்துற்றுநாவற்றிவழிநாவி
லுறும்புனலுண்ணவெண்ணுமுணர்விலார்போலவானின்
வெறும்பலன்பெறுவான்வேண்டிமின்னனார்தம்மாலீண்டு
பெறும்பயனிழந்துமாயும்பேயர்க்கார்பேசுவாரே. (௨௦)

வல்லைநீவாமியின்றேவலக்கைதாவென்னுயிர்க்கு
நல்லமெய்த்துணைவனென்னஞாலத்துச்சிலர்நீதென்னு
மெல்லியலார்தம்போகம்வேரிவெங்கொலைகளாதி
யெல்லையில்லனசெய்தின்பமிம்மையேநுகர்கின்றாயே. (௨௧)

பாகத்திற்கலந்துநாவிற்பதித்துநதன்குறங்கில்வைத்து
மாகத்திலணைத்துமன்றோவரனயன்வலாரிமாயன்
போகத்திற்பெரியரானார்பொருந்தியவாறுநீரு
மேகத்தின்மின்னனாரைவிருமபியேகூடிவாழ்மின். (௨௨)

அமைக்கொத்ததோளினார்தாளலர்த்தகச்சுவடுதாங்கி
யிமைக்கிற்செய்புலவிநீக்கியிளமுலைப்போகங்கொள்ளா
ருமிக்குத்திக்கைநொந்தோயுமுணர்விலார்புகல்பொய்வேடந்
தமைப்பற்றிச்சிலர்மெய்வாடித்தரணிமேற்றிரிவரந்தோ. (௨௩)

கனத்திறுமாந்துவிம்முங்கதிர்முலைத்தடத்தின்மூழ்கிப்
புனக்கொடிமாதர்செவ்வாய்ப்புத்தமுதுண்டுகூந்த
லினக்கடிமலர்பெய்காவினின்னிழல்வதியார்வாளா
வனக்கிழங்குண்டுசில்லோர்மறுமைவேட்டழிவர்மன்னோ. (௨௪)

மீதுலாமிந்துகாந்தமேடைமேலமளிமீதிற்
காதலாற்கலந்துகற்றகரணங்கள்பலவுஞ்செய்து
மாதரார்போகங்கொள்ளார்மன்னுயிர்தமக்குத்தாமே
யேதிலராகியின்பமிழப்பர்புன்சமயத்தோரே. (௨௫)

ஊடியங்களிர் தம்மையுணர்த்துவதுற்றகல்வி
நாடியங்கவனாமேனிநலிவதேயருநதவம்போய்த்
தேடிமென்முலையிற்றேய்ந்துதிளைப்பதுசீவன்முத்தி
கூடியிமமதமேற்கொண்டார்குவலயநதன்னின்முத்தர். (உசு)

உண்டொருமுத்தியென்றேயுடலமவாட்டுவதிங்கென்னை
கண்டவர்கேட்டோர்மற்றுக்கரியுண்டேற்காட்டுகிற்பீர்
மண்டலத்தரசனுணைவழிநின்றுநிதியமீட்டித்
தொண்டையங்கனிவாய்நல்லார்தோணலநதுய்த்திடீரே. (உஎ)

யாழினுமினியசொல்லுமேநதிளமுலையுஞ்செய்ய
மாழையைவகுத்தாலன்னவடிவமுமபவளவாயுஞ்
சூழியின்மணமுநதுய்த்துத்தோகையர்போகங்கொள்ளாக்
கோழையரவரோயல்லாற்*குணபமவேறுலகத்துண்டோ. (உஅ)

திங்களுஞ்செல்வனில்லாச்செறியிருட்கங்குற்போதும்
பங்கயமபொதுளல்செல்லாபயாய்புனறறடமும்வாசக்
குங்குமஞ்செறிநதசநதகுழம்பிடைக்குளித்தகொங்கை
மங்கையரின்பங்கொள்ளார்வாழ்வுநேரார்குமன்றே. (உகூ)

சாதியேமுதலாயுள்ளதருமங்களனைத்துநாடி
யோதுமாலிங்கனுதியுள்ளநங்களிப்பச்செய்தே
காதலாலங்கைநெல்லிக்கனியெனவிகத்தேதுய்க்கு
மாதரார்போகங்கொள்ளார்மக்களுட்பதடியாவார். (௩0)

கற்பதுகாமநன்னூல்கற்றபினதனுக்கேற்ப
நிற்பதுகயலைவென்றுநீடயின்மருட்டுங்கண்ணார்
பொற்பணமதோளிற்றுஞ்சுமபொருட்டொருப்பட்டுத்தம்மை
விற்பதுசெய்தென்றுலுமவிரகநோய்தீர்ப்பதென்றான். (௩க)

என்றினையனசொற்கூறியிகலுலகாயிதன்போர்
வென்றவன்போனின்றார்க்குமவேலையில்விவேகவேந்தன்
றன்றுணைச்சரணமபோற்றித்தார்க்கிடைநதுசீறிச்
சென்றவன்செருக்கிப்போதேசெகுப்பனென்றினையசொன்னான்.

வேறு.

இந்திரன்றனக்கொருவழிபோகத்தினிகழ்ச்சி
வந்துதோன்றலுமவன்புரோகிதன்றனமடுப்பான்
றநததோருரைகொண்டுநீசமர்க்களத்தேகி
யுந்துவாயென்னையென்றவன்மதச்செருக்குடைப்பான். ()

* குணபம் - பிணம்.

கண்டதேயுள்ளதென்றனேயுனேப்பெற்றகாலைச்
சண்டனுருயிருண்ணனுமாண்டநின்றுயை
யுண்டெனுவின்றுதெரிந்ததுகாட்சியோவுயர்ந்தோர்
கொண்டதாமனுமானமேயாதெனக்கூறுய். (ருச)

திருந்துநீணதியகிலொடுதேக்கெறிந்தெங்கு
நிரந்துநீர்ப்பரந்தொழுகுதல்கண்டவர்நெருநல்
விரைந்துதாரைகார்வெள்ளிவெண்கோலெனவெற்பிற்
சொரிந்ததாமெனத்தெரிந்ததுகாட்சியோசொல்லாய். (ரு ரு)

காட்சிமுன்னதுங்காட்சியேற்கலப்புறும்பூத
பூட்சியுள்ளெழும்போதமும்பொறிபுணர்புலனு
மாட்சியின்னுடல்பூதத்தின்புணர்ப்பெனுமாறு
மாட்சியின்னனுமானத்தானீயுங்கண்டதுவே. (ருசா)

ஒழிவிலாதுயரந்தணருள்ளுவந்தோதும்
பழையவேதநூல்வசனமும்வாய்மையேபாரில்
வழுவில்சோதிடமருத்துநூன்முன்னமேவகுத்து
மொழியுமாறுபின்பலவகைபலித்திடுமுறையால். (ருஎ)

பூதநித்தியமென்றனேயுருவுடன்பொருந்தி
யாதலற்றிடலுறுதலாலவற்றையும்படைப்போ
ரோதல்வேண்டுமான்மண்கொடுகடாதிகளுருற்று
நீதியாளரைக்கண்டனநீணிலத்தன்றே. (ருஅ)

நீரில்வந்தெழுபுற்புதம்வாயுவாணிகழுஞ்
சாருமங்கதுமன்னதாம்பூதமாச்சனியா
தோரின்வேறுணர்வாயெழாநீறடையுடன்காய்
சேரின்வேறெழுஞ்சிவப்பெனிற்றீர்வதின்றுமால். (ருகூ)

அன்னவாறுவெற்றுடம்பினுமறிவுறல்வேண்டும்
பின்னமாகியபுலன்குணமுடலின்கட்பிறவா
சொன்னநீறடைகாய்பிறன்றெருகுத்திடல்போல
முன்னம்வேண்டுமாற்பூதமுற்றிடற்குமோர்முதல்வன். ()

* உண்டியாதிநான்கைம்பொறி† யுலூதைபோலூனிற்
பண்டிலாதவைவருமெனில்வாணினுற்பவித்தல்

* உண்டியாதி - உணவு, துயில், பயம், மைதுனம்.
† உலூதை - சிலந்திப்பூச்சி.

கண்டதாகுமோரியல்பூதங்களின்கலப்பேல்
விண்டுபேசுபெண்ணுணவியோனிவேற்றுமைக்கே. (சுக)

ஐந்துநான்கொருமூன்றிரண்டொன்றெனவறிவும்
வந்திடாப்பொறி † வன்னபன்மையுமின்மையாகுஞ்
சிந்தியாவியல் ‡ வன்னபேதங்குணஞ்செறிந்து
முந்துபூதங்களவற்றினுன்முளைத்திடாவன்றே. (சுஉ)

அன்னதன்மைகள்வினையினுலென்றறியறிவு
சொன்னபூதமற்றெனிற்புறத்தறிந்திடாத்தொகுதி
தன்னிலென்றிடிற்சவமறியுஞ் ¶ சதாகதியின்
றென்னின்ஞான்நித்திரையினிலெழாவகையென்னே. (சுங)

அறிவுடற்குணமெனிற்பெரியதுஞ்சிறியதுமா
யுறுமுடற்கணவ்வகையறிவுந்திடல்வேண்டுங்
குறியுடற்பெரிதாய்ச்சிறிதாய்வருங்கொள்கை
நெறியெவற்றினுலெனத்தனிவைகியேநியம. (சுச)

ஏற்றமும்புணர்பூதத்தின்குறைவுமென்றியம்பி
னேற்றமானவைகுறைந்திடாகுறைந்தவையெவையு
மேற்றமாயிடாவெவ்வகையிருக்குமென்றிசைப்பி
னேற்றமேற்றமேகுறைகுறையேபிறிதிலையால். (சுரு)

இயல்புகாணெனிற்பெண்ணொடாணெனவிருவகையாஞ்
செயல்கொளாதவர்செய்தியால்வருவதென்றெறிக்கின்
முயல்வதாமுடல்பூதத்தால்வரலின்றுமுன்னை
மயலதாம்வினைகொண்டொருவன்றரவருமே. (சுசு)

உற்றபூதமேகடமெனக்காரியவுடலைப்
பெற்றதாமெனவுடன்படேமவையுடன்பிணங்கி
நிற்றல்காண்டலினெருப்பியல்பாய்நெடுநீத்தம்
பற்றிநின்றதுகண்டனையேவின்றுபகரோ. (சுஎ)

வெய்யதீயொடுஞ்சநதொடுஞ்சாரநீர்வினையென்
செய்ததென்றனைசேருநீரிருதிறஞ்சேர்ந்தாங்
கையசெய்கையாலின்பொடுதுன்பமுமணையும்
பொய்யுடற்கிலையவையுஞ்சேதனனுக்கேபுகலின். (சுஅ)

† வன்னம் - பிராமணுதி.

‡ வன்னம் - அட்சரம்.

¶ சதாகதி - வாயு.

இன்பமுற்றுங்கீ வினையிலையியல்பெனவியம்பிற்
றுன்பமுற்றிடுமோறென்னைசொல்லுசொல்கிலையேன்
முன்புசெய்வினையவ்வினைதன்னையுமுதல்வ
னன்பினாலறிந்தப்பயனமைக்குமீதனாதி. (சகூ)

அனாதியாமெனினமைப்பதேனென்றிடிற்கரும
மனாதியாருயிர்செயலவையறிந்துடற்செய்யா
வனாதிகாரியமாமுடலசேதனமனைய
வனாதியாதியிலமைத்திடல்வேண்டுமாலன்றே. (ரு0)

நோக்கொணுக்கரணங்களுக்குயிர்நோக்கொணாதே
வாக்குமாத்திரங்கண்டகண்ணினைக்கடமதித்துத்
தூக்குமோவதுபோற்கரணங்கள்சூழ்ந்தறிதற்
காக்கமின்றுயிரவற்றினையறியுமாலன்றே. (ருக)

எரியுமொன்றினைப்பற்றியல்லதுநிற்பதிசையா
தரியசீவனுமவ்வகையுடல்பற்றியுணருந்
திரியினாற்றயிலங்குடித்தெழுதருந்தீபம்
புரியுமோரிருவினைகளுமுயிருண்டுபோதும். (ருஉ)

உணர்வுதானுடலத்துவேறுயுதித்தொடுங்கி
னுணர்வுதானுணராததென்முன்புளதோதி
னுணர்வையோநனவைக்கனவதனிடையுதாத்
துணர்வுதான்கொலோவிதுமயக்குணர்வெனுவுணரே. (ருங)

மாண்டவவ்வறிவேவருமெனல்வழக்கன்றே
யீண்டுறங்குழியறிவின்றியெழிலெழுமிதுதேர்
பூண்டவிவ்வுடல்போகவேறுடல்வரல்புகலின்
மூண்டெழுங்கனவதனின்வேறுடல்வருமுறையே. (ருச)

* வாயில்வர்யமற்றடங்கலுமடங்கிவந்தெழல்போ
லோயுநாளினும்வாயில்கண்மாய்ந்துபின்னுதிக்குந்
தேயுநீள்கலைசெனிக்குமென்னார்மதிக்குளாத்தாங்
கேயுமாருயிர்க்கிறப்பொடுபிறப்பையுமிசைப்பார். (ருரு)

பூதகாரியம்பொலிந்துநின்றழிந்திடுமதனு
னுதன்வேறுளனென்றறிமண்ணின்கண்ணுணு
பேதமாங்கடமாதிகள்வருமெனப்பேசிற்
றீதிலாவொருகுலாலனால்வருமெனத்தேறே. (ருசு)

* வாயில் - ஐம்பொறி.

சோலிரத்தமுனரம்பென்புமச்சைசுக்கிலமே
கோலிவைத்திடு * குடம்பையல்லாற்குழைதாவிப்
பாலிடத்தருமணியெனக்கறுத்தரிபரந்து
வேலடர்த்தகண்மாதரார்யார்கொலாம்விளம்பே. (௫எ)

கொங்கைவிக்கமுங்கொழுங்கயற்றடங்கணுமல்குற்
பங்கயப்பரப்புங்குமிழ்நாசியும்பகுத்திட்
டுங்கணங்களைகிடந்துழிக்கண்புழைதந்தஞ்சிச்
சிங்கலுற்றவர்க்கெனகொலாருசெறிந்துழித்திகைப்பே. ()

கோணழிதன்னியவாய்விரிம்பூறலைக்கோதி
லாழியின்னமுதெனநுகர்ந்தகடெனுமுவர்நீர்த்
தாழியின்புழைதன்னிலோரின்பமுண்டென்று
வேழைநீமருண்டின்பவிடிழந்தனையன்றே. (௫௯)

அழுக்குவேர்வைநீரால்வெண்பீளைபூறசுத்த
மொழுக்குநிண்மயிருகிர்செறிமெயான்பதுவாயிற்
புழுக்குழாமயில்புன்புலாற்குடிலைமற்றென்னே
யிழுக்கின்மாநரொன்றினமுலைபம்போகமாநுவதே. (௬0)

கண்ணுமோதியுமுந்தியுங்கறுத்துவாய்மொழியு
நண்ணுமபுன்மயிர்பபுருவமுமங்கோடிநற்செயலு
முண்ணடிக்குறுமருங்குலுஞ்சுருங்கியுள்ளவாவும்
வண்ணவல்குலுமகன்றவர்க்கென்கொலாமாண்பே. (௬க)

வெய்யவேலிவிற்றீதநீரிதமெனவிழைந்துஞ்
செய்யவாரமுன்மாரியினன்றெனச்சேர்ந்து
மையநீபொருஞ்சுகஞ்சுகமோவழிவின்றித்
துய்யதாகியசச்சிதானந்தமேசுகமால். (௬உ)

ஆயத்தக்கதுவேதத்தினந்தமேயாய்ந்தா
லேயத்தக்கதுவேட்கையின்பெருக்கமேயொருவர்க்
கேயத்தக்கதுபரம்பரன்கருணையேயென்றுந
தோயத்தக்கதானந்தவாரிதியிதுதுணிவே. (௬௩)

என்றுமேலனுமானமாதியுமவிணையிரண்டு
மொன்றுசீவனுமிறையுமுண்டென்றுமொண்டொடியார்
துன்றுபோகம்வீடன்றென்றும்வன்வலிதொலைத்து
நின்றதார்க்கிகன்மேற்பொரப்புத்தர்போர்நேர்ந்தார். (௬௪)

உலகாயிதன் வதைச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க௫0௪.

---

* குப்பை எனவும்பாடம்.

§ சீள் எனவும்பாடம்.

## ௩உ - வது, புத்தர்வதைச் சருக்கம்.

தாவிலாதிகல்சவுத்திராந்திகன்யோகாசார
ஞேவின்மாத்திமிகன்னெனவிகற்பங்களுரைக்கு
மூவரோடுவைபாடிகனிவரின்மோக
னேவலான்முதற்சவுத்திராநதிகன்கனன்றெழுந்தான். (௧)

வெய்யகூற்றினையறிவிலான்வெகுண்டமர்விளைப்பக்
கையிளுல்விளித்தாலெனவென்றெடுங்கடும்போர்
செய்யவல்லையேல்வருகெனவிளித்தவன்சிறுநூல்
வையமேற்கொடுதார்க்கிகர்கோனெதிர்வந்தான். (௨)

இடக்கணுடைவுமெருவைமேன்மண்டிலமிடவுந்
தடக்கையாற்றலாலவையுநோக்கிலன்வந்துசார்ந்து
விடத்துமாரமுலினுங்கொடி தாய்ச்செவிவெதுப்பப்
படைத்துவெஞ்சினவஞ்சினமின்னனபகர்ந்தான். (௩)

வேறு.

முற்றுணர்ந்துபுவிமீதுகொலைமுதலாகியதீமைமுனிந்துசாந்த, முற்றிருந்துகருணையினுற்பராதுக்கதுக்கனுயும்பரோடு, கற்றுணர்ந்தமுனிவருங்கண்டுதொழப்பிடகநூல்கனிவான்முன்னஞ், சொற்றிருந்தவுரைத்தருஞானதோன்றலேகடவுளருட்டோன்றலா ...ன். (௪)

பிரமாணமதுகாட்சியனுமானமிரண்டவற்றாற்பேணிக்காண [த
வருஞானஞேயமவைபொருளவையுங்கணததிறமவ்வகைபதார்த்
முருவோதினருவீடுவழக்கெனநான்காயவவுமொன்றிரண்டா
யிருநான்குவகையாகுமிவையெமதுபிடகநூலியல்பதாமே.

கெட்டுவளர்ந்திடல்கெட்டுத்தேய்ந்திடல்கெட்டொத்துநிற்றல்கெட்டுக்கெட்டுப், பட்டுவிடலெனக்கணத்திற்பங்கமுறுந்திறநான்காய்ப்பகராநிற்ப, மொட்டியுணர்ந்திடுஞானஞேயத்தின்றிறமாகவுரைத்தநான்கு, மெட்டுவகையாகுமெனவுரைத்தபரிசிப்பரிசென்றினிச்சொல்வேமால். (௫)

உருவினியல்பூதமுடனுபாதானமெனவிரண்டாமுருவமல்லா, வருவினியல்சித்தமொடுகன்மமெனவிரண்டாகுமற்றும்வீட்டின், மருவுமியல்குற்றமொழிகந்தமெனவிரண்டாகும் வழக்கிரண்டாய்

ப், பொருளுமியலுள்ளதுடனில்லதுமென்றிரண்டாகப்புகல்வர்மாதோ. (எ)

பூதநிலமபுனல்கனல்காற்றெனநான்காமுபாதானம்புகலிற்கந்த
மேதமறுஞ்சுவைபுருவம்பரிசமெனநான்காகுமிந்தவெட்டு [ங்
மோதுமிடத்துடன்கூடியுண்டாகுமொருபொருளினுருவஞ்சித்த
காதமுதற்பொறியொடக்காணபதுருவினைகருமங்கருதினன்றே()

விரியுமிராகாதிகளைவிடுத்ததுற்றவிடுகெந்தவிடேநாடி, னுருவு முதலோனாந்துயவிடுத்த விருவமைவழக்குமோதுங்காலை, மருவு தொகைதொடர்ச்சியிகுதுறையெனவொன்றொருமூன்றுவகைத் தாயாறுந, தெரிவுறுமாறவவாறுமிவவாறுமெனவகுத்துச்செப்பக் கேண்மோ. (௯)

கந்தமைந்தின்செறிவொருவனென்பனபன்மரஞ்செறிவுகாடெ ன்றற்போல், மைந்தவென்றதொருபுள்வழக்கயலொருவனவை யைந்துமடுப்பானென்ற, லெசைதயியமபிய தொகையில்வழக்கா குங்காரணகாரியந்தாற்றோன்றி, யந்தமடைந்திடுவனென்றதொட ர்ச்சியுணமைவழுகனைநாவறையுமன்றே. (௧0)

மாண்டவழியேயுடியானைன்றுமலொருவனென்றும்வைகு வானென், நின்டவுடமாபபதுதொடர்சியில்வழக்காமுதித்தவெல் லாமிறக்குமென்றல, வேண்டுமிகுத்துறையுள்வழாகாமவிழிக்குப் போனதுபோல்வேறுமென்றல், பூண்டமிகுத்துறையில்வழக்காகு மின்னுமவற்றினியல்புகலக்கேண்மோ.

ஓதியிடுவுள்வழககில்வழக்குண்மைசார்ந்தவுண்மையுண்மை சார்ந்த, வேறமுறுமில்வழக்கில்லதுசார்ந்தவுண்மையின்மைசார் ந்தவின்மை, பேதமிவையாறுமுளவழக்குளதையுளதென்றுபேச லால, முதுமகினில்வழக்குச்சொலின் முயற்கோடில்லையென மொழிவதாமால். (௧௨)

அறிவினைச்சார்ந்தறிவுதிக்குமென்பதுண்மைசார்ந்தவுண்மை யறிவைச்சார்ந்தே, யறிவுபின்னருதியாதென்னுளைப்பதுண்மை சார்ந்தவின்மையறிவில்லாம, லறிவுபினைருதிக்குமென்பதில்ல துசாருண்மையின்மையதுசாரின்மை, யறிவினைக்கொண்டறிந்தி டவுள்ளஙகைமயிர்க்கயிறென்பதாகுமென்றான். (௧௩)

இத்திறஞ்சூளுறவுதொகுத்தெடுத்திசைத்துக்கைத்தலங்கொ ண்டிருதோள்கொட்டித், தத்துமடற்புலிப்போத்திற்சவுத்திராந்தி

கன்முழங்கித்தணியானுகிப், பொத்துநெடுஞ்சமர்க்களத்திற்பொ ருந்தலர்போரணியுடைத்துப்பொருவானெண்ணி, மத்தமதிகொடு பிடகநூனெறிவன்படையினணிவகுத்தல்செய்தான். (௧௪)

இன்னவகைபகர்ந்தவிவைநான்கல்லாற்பொருளிலவாயிருக் கவான்மா, மன்னியவிண்காலநதிக்கிறையுமுளவெனச்சிலர்தாம் வகுத்தலென்னோ, யுமன்னியிடின்மதுவுண்டோ வுன்மத்தம்பிடித் தேயோவுணர்கிலோமா, லன்னவையுமின்னவையா லகற்றுவன் யான்காண்டிரொனதாண்மையென்றான். (௧௫)

அறிவுபிறிற்குளதென்னிற்பொறிபுலனூலாலொன்றையறித ல்வேண்டா, * வறிதமிறாட்டுத்தீண்டியவணந்தறியுமெனி லிருளி னிறமறியாதாகு, மறிவதிலபொறியிலயேலெனினுமிருக்கறி விலையைம்பொறியும்பற்றி,யறியுமறிவுளதென்னிலைந்தினுமோரறி வாகவறிதல்வேண்டும். (௧௬)

சார்ந்தறியுமொன்றையறிவெனினீயுமொருபுந்தன்றானுமென்ப தோர்ந்தறிதியதுகிடக்கஞானஞேயங்களன்றியுணருமான்மாத் தேர்ந்தறியினறிவோமற்றறிவன்றோவன்றாகிற்செடமாமண்போற் கூர்ந்தறிவேற்பருப்படிசிறக்கதுவேசிற்றுண்டியெனக்கூறலாமே.

உயிரதனையருவென்னினுருவதனைந்தாங்கியருவுற்றுநில்லா, துயிரதனையுருவென்னினுடலினுக்குள்ளுடலடங்கி யொடுங்கமாட் டா, துயிரதனையணுவென்னினுடலிடந்துபபலதுளையுண்டோடி ப்போமா, லுயிரதனைநித்தமென்னினுதயாத்தயனமறிவுக்குளவா காவே. (௧௮)

எங்குநிற்குமென்னினுடன்றுறும்பேதபபடுகையினலெங்கு மின்றாந, தங்குமுற்றவுடன்றுறுநிறைநதென்னினுடலமதுசாயச் சாயு, மங்கமுற்றேறிடத்துறையுமென்னிலடிமுடிகாறுமறிவின் றுமாற், பங்கமுற்றுநிற்பதன்றியிப்படையைப்படைகொடுநீபடுப் பையன்றே. (௧௯)

தொழிற்குவராமையின்வானென்றென்றிலையெப்பொருள்க ளையுஞ்சுமக்குமென்னில், விழிக்குவராநிரவயவமேற்கொண்டு சுமப்பதெங்ஙன் வினவிறேசைக், கொழிப்பதிலாச்காரணமென் றுரைத்தனேயேலதுபகரினுருவின்கூட்டங், கழிப்பதிலாதெங்கு நின்றதெனிலெங்குமென்பதொன்றுகண்டதின்றே. (உ0)

* அறிவதொட்டி எனவும் பாடம்.

ஞாலமென்பதென்னையெனிற்படைத்தளித்துப்போக்குவது காணென்றாயேற், சீலமென்பதொருபொருளைச்சேர்ந்துளதால தன்பின்னர்ச்செறிவதின்றாந், தூலமென்பதுனதுமதிபொருளியல் பாலவ்வினைகடன்னுமிந்த, ஞாலமென்பதுன்மதிமற்றில்வழக்கே காலமெனநவிற்றுங்காலே. (உக)

எனக்கொருவன்மேற்கிருந்தாலென்பாலைக்கிழக்கென்னவியம்பல்செய்வா, னெனக்கொருவன்கிழக்கிருந்தாலென்பாலைமேற்கென்னவியம்பநிற்ப, னெனக்கொருவன்கூறியவாறியம்புதல் கூடாதிருவேறியற்கையான்மற, றெனக்கொருவனெதிராகத்திக்குளதென்றுரைப்பதெவ்வாறில்வழக்கே. (உஉ)

உலகதனையிறைபடைத்தானென்றனையேலுள்ளதையுண்டாக்கவேண்டா, வுலகதனையில்லதெனிலுண்டாக்கக்கூடாதாலுபாதானந்தா, னுலகதனுக்குளதிலதாகாரியமாமுருவனையவுருவமாக, வுலகதனைப்படைத்தனனென்றாலுமுளதிலததற்குமுண்டாமன்றே.

உள்ளதனைக்கடம்போலப்படைத்தனனேலெவ்விடைநின்றுஞற்றல்செய்தான், வள்ளலவனுலகினுக்குமேலாகிநின்றுலகைவகுத்தானென்னில், விள்ளுமிடத்துலகுமுன்னேயுண்டானதாமெங்குமேவிநின்று, தள்ளரியவுலகதனைத்தந்தனனேலெங்குமுன்பு தந்ததாமே. (உச)

இல்லதனைக்கருணையினாற்படைத்தனனேற்பாம்புபுலியாளியாதி, கொல்லுமவைபடைத்திடுதல்கூடாது தன்வலியாற்குறித்தவெல்லாம், வல்லவகைபடைப்பனெனிற்பித்தனைபடைத்ததனால் வரும்பேறேதிற், புல்லும்விளையாட்டென்னிற்சிறுகுழவியிறைவனெனப்புகல்வரன்றே. (உ௫)

கருமத்தாற்படைத்தனனேற்கருமமியற்றுநனைமுன்புகாணல்வேண்டு, மொருமைத்தாயறியுமிடத்துலகமெல்லாமனாதியதேயுண்மையாகும், பெருமைத்தாமுருவினனேலவ்வுருமுன்படைத்தானைப்பெறுதல்வேண்டு, மருமைத்தாமவ்வுருவுமிச்சையினாலெனிலுலகுமதனாலுண்டாம். (உ௬)

இச்சையிறைக்குலகினுக்குக்கருமமென்னிலுருவங்களைவைக்குங்கன்ம, நிச்சயமாமருவாமேல்வானமெனப்பவக்கடலினீக்கமாட்டான், வைச்சநிழல்போன்றுளனேலறிவிறைவற்கின்றறிவு

வந்தோற்காகு, மெச்சுமறிவுளனென்னிலுருவேண்டுமின் றாகின் மேவானன்றே. (உஎ)

எம்முடையவேதங்களறுதியாயிறைவனுண்டென்றியம்புமெ ன்னி, இம்முடையவேதம்பருணைப்பவாயில்லாமனுஷாத்தனன் றுஞ், செம்மைபெறவி றவனை நூலாலறிந்தோ நூலவனுற்றெரிந் தோமென்னி, மைமயவி புதுமையிவ்வாறுமைபபதறகுநீயலலா விரர்வல்லாரோ. (உகு)

மரமாதி புற்பிசமும்பிரின்றிப்பூதவு நவாய்த்துமல்கிக், குரமா தியெனத்தோன்றியண்டசமாதிக்குதவிகூர்ந்தாயாயு, மொருகாலு ங்கொலையாகாதுன் வெண்டிற்கொன்றது கொண்டுண்ணலாகுந், த ைமீதுமாண்டதெல்லாமண்ணினுக்குங்கொன்பர்தக்கோரன்றே. சீதநீர்வைத்தறுருக்கறமதனையுண்டவர்க்குச்செறியாதவ்வா றோதினானுண்டவர்கருப்பாவமினறுகொன்றவருக்குறுவதாகு மாதலாலூனருந்தவாசையுண்டேற்செத்ததுண்ணலாகுமிந்த நீதியார்மறுத்தாரைப்பாருனுக்கு ஞட்டாதார்நினைவிலாரோ. (கூ0)

உருவமவேதனைகுறிப்புப்பாவனைவிஞ்ஞானமெனவுரைத்த வைந்து, மருவியெசகதானத்தாற்கெடுதல் பாசதுக்கமற்றவைந் தும், பொருவிலாவகைமுறறக்கெடுதன்முடிதியின்பமுன்புகன் றவைந்தின, விரிவெலாந்தொகுத்துரைத்தமெய்நூலிற்றெரிந்தி ரிவைமெய்மையென்றான். (கூக)

இன்னன சாதனங்கள்பலதொடுத்துமடுத்தடுத்திகலியிரு தோள்கொட்டித், துன்னியபோர்த்தெருறிற்கடுத்தசயுந்திராந்திக னெழுந்தறோற்றநோக்கி, யன்னவனைப்பிக்களந்திலடுவனெனத்தா ர்க்கிகர்கோனமுன் றுசிறி, மன்னியபல்வகையுத்திவன்படைகொண் டக்களத்தில்வாய்விட்டார்த்தான். (கூஉ)

வேறு.

முழுதையுங்கண்டான்புத்தனென்றனைமுடிவின்றுமான்
முழுதையுங்காணமாட்டானென்றுன்றுய்முழுதுங்காணின்
முழுதையுமுடிவிலாததென்றிடென்முழுஞானத்தான்
முழுதையுங்காணின்ஞானமுடியுமோர்கணத்தினன்றே. (கூகூ)

வீடுகண்டறங்கள்சொன்னனெனின்முற்றுமவிளிந்தோன்மீண்டு பாடுதல்சமனுநதேனைப்பருகியோன்மாய்ந்துவந்து

* சாதகம் எனவும் பாடம்.

நாடும்ஞானிதுதீதாகுமென்பதாநவிவுபின்பே
லாடுநீரளவைகாணுனக்காக்கேற்றல்போலும். (௩௪)

பரதுக்கதுக்கனுகிறபதிதனையிழந்தமாதர்
விரகத்திதனக்குங்காட்டில்வெட்டமேற்கொண்டுளோர்க்குங்
கரவிற்கைப்பொருள்கொண்டீடுகுங்கள்வர்க்குமுயகசிந்துசோர்த
றனையிற்றக்கதுமற்றன்றேதருபமீதழகிநாமால். (௩௫)

அங்கொருபொருளைத்தேதடியதற்குமாறுடுமன்னர்
மங்குமுன்னறிவுநூலென்வழிவழிதோன்றுமாகி
லெங்குளதாகுமவேனுயிலைசந்தேதயிசைப்பதின்றிப்
பங்கமுற்றெறுமவேவெறன்னிற்பாலருன்மத்தர்சொல்லே. (௩௬)

முதனடுவிறுதிதம்மின்முரணுவதின்றிப்போர்க்
கிதமுறப்புகன்றநூலேயாவருமயிலுநூலாம்
புதன்மகன்போலப்பேசும்புத்தகேள்பொன்றிநாநா
விதவிதமாகுமுன்னூல்வீசுமுன்னூலாமன்றே. (௩௭)

முந்தையேயறங்களாற்றிமுற்றுணர்ந்தருளினாலே
யெந்தைநூலுரைத்தான்முத்தியாவருமெய்தவென்று
யுந்தைபோரறங்கள்செய்யவுரைத்தநூலியாவன்சொற்ற
தந்தநூலவனைப்போல்வானெனிலனவத்தையாமே. (௩௮)

ஆதலாலுனதுபாழியமர்நெடும்புந்தனுனொன்
றேதுவாயிந்நூல்சொன்னேனுமுடபவனென்னிலன்றே
னுதனுயிருந்தபுத்தனயந்தெதவ்விடமுனக்குப
போதகனடைவுமின்றுபுகன்றநூலடைவுமின்றே. (௩௯)

உன்னிறைபொன்றக்கெட்டேயொழிந்தனனுகிலானை
யென்னிடர்களைதியென்னுவிறைஞ்சுதியிறந்தோர்க்கீண்டுப்
பின்னவர்செய்தகன்மம்பேறுசெய்தவர்க்கீந்தாற்போ
னன்னலந்தருமாலென்றுநவில்லையேனவிலக்கேண்மோ. (௪0)

ஆருயிர்நித்தமாகுமாதலாற்பலிக்குங்கன்ம
நேர்தருபலத்தைநல்குநித்தனுமொருவனுண்டாற்
சீர்தருந்தீபம்பொன்றத்திரியுடனெய்யுங்கூட்டு
வோர்செயலுனதுசெய்கையுன்னறிவழகிதாமே. (௪க)

பனுவல்கொண்டனுமானத்தாற்பகர்ந்தவன்றனைத்தேர்ந்தாற்
போற், பனுவல்கொண்டுனைத்தவெல்லாப்பதார்த்தமுமனுமானத்

தாற், பனுவல்கொண்டறிவதென்னிற்பரலோகபாதாளங்ஙள்,பனு
வலொன்றுரைத்த * துண்டேற்பகருதிபகர்ந்ததின்றே. (சஉ)

பொருளெல்லாமனித்தமென்றுய்புகன்றதில்லதற்கோவன்றி
யுரைசெயுள்ளதற்கோவேறுயுளதிலதானதற்கோ
தெருளினில்லதனுக்கின்மைசெபபுவதென்னைபின்னை
மருளினுள்ளதறுகென்றுயேன்மற்றதுமாய்நதிடாதே. (சங)

உளதிலதானதற்கேனுளதிலதாகாதில்ல
துளதெனவுதிக்கமாட்டாதுறுவதிங்கெவற்றுக்கென்னி
னுளதிலதன்றித்தோன்றுமொருபொருளின்றுமாய்வ
துளதுமற்றிதனைநீயுமுணர்வினுலுணர்ந்துநோக்கே. (சச)

உடல்பூதமென்னிலொன்றுவொன்றொன்றிகலுமாற்று
னுடனுறுசுக்கிலத்தோடுதிரமேற்கல்விற்றேறை
யுடலொடுவருமாறென்னேயுரையிருவினைகாணென்னி
னுடல்வேறுவேறுய்த்தோன்றுமுபாதானமவையேயபோல. (சரு)

அன்னமேனுண்ணவுண்ணவதிகமாய்வளருங்காய
முன்னுவாயுணர்வாமென்னினுணர்வருவுருவமாகித்
துன்னசேதனமாகாதாற்றென்றுமில்லதுமற்றென்னிற்
பன்னுவாய்ககனத்துபெங்கயமலருமென்றே. (சசா)

உருப்பூதவுபாதானங்களுறுஞ்சுத்தாட்டகமேற்காற்கு
நெருப்பொடுபுனல்பார்மன்னிநிலைபெறுமிரதங்கந்தம்
வரப்போவதில்லைத்தீக்குவளிநீர்மண்சுவைநாற்றநதான
றரப்போமேநீர்க்குவாயுத்தழல்பார்வாசனையுமின்றே. (சஎ)

புந்திசெய்பாரினுக்குப்புனல்கனல்வளியுமில்லை
யிந்தியவிடயமாகியியவுறுமாபூதங்கள்
வந்திடுமியல்புந்தோய்வன்சொல்சேர்தேரநீயோ
ரந்தகன்கொல்லோசொல்லாயறிவின்கேடுனதாமன்றே. (சஅ)

அறிவழிந்தறிவையாக்கிலழிந்ததுண்டாக்காதான
வறிவினப்பொருள்கன்மங்களணைந்திடாவாக்கிப்போமே
லறிவிரண்டொருகாலத்தினவ்வகைநிற்கமாட்டா
தறிவறக்கெடாதேதனித்தமனித்தமுமறிவிற்காமே. (சகூ)

அவ்வகையதனுலென்றுமனித்தமென்பதுதானின்றுஞ்
செவ்விதிற்கெட்டுப்பின்னர்ச்செனிப்பிக்குமெருப்போலென்னில்

* உண்டோ எனவும் பாடம்.

